# போர்வாள்

வாள் 4

## அரசியல் மரணத்தின் பிடியில் ஆளவந்தார்கள்




ஆசிரியர்கள்:- காஞ்சி, மணிமொழியார்.
மா. இளஞ்செழியன், B.A. (HONS)

விலை 2

Best copy available.

# ★ கழகச் செய்திகள் ★

### வ. ஆ. மாவட்ட திராவிட முன்னேற்றக் கழகம்

வட ஆற்காடு மாவட்ட திராவிட முன்னேற்றக் கழக செயற் குழுவின் கூட்டம் காட்டுப்பாடி தி. மு. க. காரியாலயத்தில் நடைபெற்றது. மாவட்டத்தின் பலபாகங்களிலிருந்து வந்திருந்தவர்கள் 30 பேர்கள்.

வருவதற்கு சௌகரியமில்லாத தோழர்கள் 6 பேர்கள் தீர்மானங்களை ஆதரித்து தபால்மூலம் தெரிவித்தார்கள்.

கீழ்கண்ட தீர்மானங்கள் ஏகமனதாக தீர்மானிக்கப்பட்டன.

#### தீர்மானம்

(1) சமீபத்தில் சென்னையில் 24—10—50லும் 26—10—50ல் குன்றத்தூரிலும் நடந்த தடியடி துப்பாக்கிப் பிரயோகத்தை இக் கூட்டம் வன்மையாகக் கண்டிக்கிறது.

(2) தீர்மானம் 1ல் கண்டகண்டன வாசகங்களை தந்திமூலம் சென்னைப் பிரதமருக்கு தெரிவிக்க வேண்டுமாய் தீர்மானிக்கிறது.

(3) மத்திய செயற்குழு சென்னையில் 23—10—50ல் செய்த தீர்மானங்களை இக் குழு ஏற்றுக் கொள்ளுகிறது.

(4) மத்திய செயற்குழு தீர்மானப்படி தடை செய்யப்பட்ட நாடகங்களில் ஏதாவது ஒன்றை நடத்த தீர்மானிக்கப்பட்டது.

(5) திருப்பத்தூர் தி. மு. க. தோழர்கள் வேண்டுகோள்படி முதலில் திருப்பத்தூரிலேயே தடை செய்யப்பட்ட நாடகத்தை நடத்த இச் செயற்குழு உத்தரவு கொடுக்கிறது.

(6) தடைசெய்யப்பட்ட நூல்களை விற்பனை செய்யவோ அல்லது மக்களை சேர்த்துப் படித்துக் காட்டவோ கிளைக்கழகங்களிலிருந்து உடனே இயக்கத் தோழர்களின் பெயர்களையும் முகவரியையும் விரிவாக எழுதியனுப்பவேண்டுமாய் கிளைக்கழகச் செயலாளர்களை இக் கமிட்டி கேட்டுக்கொள்கிறது.

### கண்ணமங்கலத்தில் தி. மு. க. திறப்புவிழா.

4-11-50ல் ஆரணி தாலுக்கா கண்ணமங்கலம் கிராமத்தில் தி.மு.க. திறப்பு விழா நடைபெற்றது. அன்று மாலை 6 மணிக்கு தி.மு.க. சார்பில் தர்மராஜா கோயில் முன்பாக உள்ளூர் பிரமுகர் ஒரு பெரியார் தலைமையில் நடந்தது. அது சமயம் காட்பாடி தோழர் V. A. ரகுல் அவர்களும் வடஆற்காடு மாவட்ட செயலாளர் போளூர் தோழர் K. சுப்ரமணியம் அவர்களும் வேலூர் தோழர்கள் இளஞ்செழியன், கருத்தோவியன் ஆகியோர்களும் தற்காலகாங்கிரஸ் அரசாட்சி 24-10-50ல் சென்னையில் நடத்த போலீஸ்தர்பார் ஆட்சியைக் கண்டித்தும் குன்றத்தூரில் நடந்த போலீஸ் துப்பாக்கி பிரயோகத்தை கண்டித்தும் பேசி இரவு 10-15 மணிக்கு இனிது கூட்டம் கலைந்தது. கூட்டத்திற்கு ஏராளமான தாய்மார்களும் ஆண்களும் சுமார் 5000 பேர்களுக்குமேல் வந்திருந்தார்கள்.

### காட்டுப்பாடி

வட ஆற்காடு மாவட்டம்.

இவ்வூரில், 6-11-50-மாலை6-30 மணிக்கு ரேடியோ மைதானத்தில், தி. மு. க. கிளைக்கழகம் துவக்கி வைக்கப்பட்டது. தோழர் வெண்குன்றம் கிடி. அண்ணாமலை கூட்டத்திற்குத் தலைமை வகிக்கவும், கழகக் கொள்கைகளை விளக்கியும், சர்க்கார் போக்கைக் கண்டித்தும், மிகவும் உற்சாகத்தோடு பேசினார். பிறகு வாணியம்பாடி தோழர் தத்தப்பன், போளூர் சுப்ரமணியன், காஞ்சி, கல்யாணசுந்தரன் சொற்பொழிவாற்றினர்கள். தோழர் மஜீத் அவர்கள் ஆரம்பத்தில் திராவிடப்பண் பாடினார்.

### ஒடசல்பட்டி

சேலம் மாவட்ட ஒடசல்பட்டியில் 5—11—50ல் தி. மு. க. செயற்குழு கூட்டம் மாலை 6 மணிக்குக்கூடி, சென்னையில் நடைபெற்ற தடியடி பிரயோகத்தையும் குன்றத்தூரில் நிகழ்ந்த துப்பாக்கிப் பிரயோகத்தையும் கண்டித்துத் தீர்மானிக்கப்பட்டதோடு, பொதுச் செயலாளர் அறிக்கையின்படி, தீர்மானத்தை சென்னை சர்க்கார் முதல் அமைச்சருக்கும் அனுப்பப்பட்டு இருப்பதாகச் செயலாளர் அறிவிக்கிறார்.

### சேத்துப்பட்டு

சென்னை

5-11-50 காலை10 மணிக்கு, ஜெகநாதபுரம் இராசம்மாள் வீதியில் உள்ள கழக அலுவலகத்தில் கிளைக்கழகப் பொது உறுப்பினர்கள் கூட்டம் நடைபெற்றது. செயலாளர், துணைச்செயலாளர், பொருள் உறுப்பினர், விளம்பர உறுப்பினர் என்ற முறையில் தோழர்கள் ஆ. சுப்ரமணியம், எ. செல்வராசன், ம. பூ. சிவஞானம், டி. சிங்காரம் தேர்ந்தெடுக்கப்பட்டனர். சென்னை மாவட்ட தி. மு. கழகத்திற்கு, தோழர்கள்: ஆ. சுப்ரமணியம், டி. சிங்காரம் உறுப்பினர்களாகத் தேர்ந்தெடுக்கப் பட்டுள்ளனர் என்று விளம்பர உறுப்பினர் அறிவிக்கிறார்.

### மேலூர்

மதுரைமாவட்டம்.

இவ்வூர் பள்ளியில் 3-11-50 திராவிட மாணவர் முன்னேற்றக் கழகம் அமைக்கப்பட்டது. அவ்வமயம் செயலாளர், துணைச்செயலாளர், பொருள் உறுப்பினர், விளம்பர உறுப்பினர், தேர்ந்தெடுக்கப் பட்டதோடு, ஒரு நிர்வாகக் குழுவும் அமைக்கப்பட்டதாக, விளம்பர உறுப்பினர் தோழர் சு. இராசரத்தினவேலு அறிவிக்கிறார்.

### ஆலங்குடி

திருச்சிமாவட்டம்.

பொதுச்செயலாளர் அறிக்கையின்படி, 4-11-50-ல், இவ்வூர் தி. மு. க. உறுப்பினர் கூட்டம் கூடி,

(19-ம் பக்கம் பார்க்க)





# காலக் கண்ணாடி

#### சிந்தி சீறுகிறது?

இந்தியால் தமிழ்கெடும். தமிழர் நாகரிகம் சீரழியும். தமிழரின் முற்போக்குத் தடைப்படும். தமிழர் பெற்றுள்ள கருத்துவளம் குன்றும். வாழ்க்கைத் துறைகள் அனைத்திலும் அறிவைக் கெடுக்கும் ஆபாசக் கருத்துக்கள் இடம் பெறும். தமிழரின் வாழ்க்கை வழியே மாறிவிடும். இப்படி எல்லாம் நாம் கூறுகின்ற பொழுது, நம் மீது சீறிவிழுகின்றனர் பத்தரை மாத்து தேச பக்தர்கள். நாம் காட்டும் காரணங்கள் ஒன்றுக்கேனும் கருத்தான பதில் கூறி மறுக்காமல், நமது பேச்சுக்குக் களங்கம் கற்பித்து, நமது கூற்றைத் திரித்துக்கூறி, தமிழுக்குக் கேடு சூழ்கிறார்கள். இதுவுமல்லாமல், இத்துணைக் கண்டத்தில் பொதுவாகப் பெரும்பாலோர் பேசும் மொழி இந்தி, குறிப்பாக வடநாட்டில் எங்கும் இந்திதான் பரவி இருக்கிறது, எனவே இந்தியை நாம் அனைவரும் கட்டாய பாடமாகக் கற்றே தீரவேண்டும் என்றும் வாதிடுகிறார்கள்—இல்லை —வம்பளக்கிறார்கள்.

கீழ் பஞ்சாபிலே உள்ள சீக்கியர்கள், தங்கள் பஞ்சாபி மொழிக்குத்தான் ஆதிக்கம் இருந்தாக வேண்டும், தங்கள் மாகாணத்தில் பஞ்சாபி மொழிக்குத்தான் முதலிடம் ஒதுக்கப்பட்டாகவேண்டும் என்று பேசும் பேச்சு நாளுக்குநாள் உரம் பெற்றுக்கொண்டு வருகிறது.

இதேபோல வங்காளிகளும் தங்களுடைய வங்காள மொழிக்கும் முக்கிய இடம் இருந்தாக வேண்டும் என்றும், வங்காள மொழி மிகமிக ஏற்றம் பெற்றுள்ள மொழி என்றும் எடுத்துக் காட்டி, இந்தி மொழியின் மீது வெறுப்புக் காட்டுகிறார்கள் என்பது நீண்டகாலமாக இருந்துவரும் உண்மையாகும்.

வடநாட்டிலும் இந்தி நீங்கலாக வேறு மொழிகளைத் தாய் மொழியாகக் கொண்டவர்கள், இந்தி மொழியை முகமலர்ச்சியோடு வரவேற்கத் தயாராக இல்லை—கூடுமானவரை எதிர்த்தே வருகிறார்கள்.

இதோ சிந்தி மொழி பேசுவோர், இந்திக்கு எதிராகக் கிளர்ச்சி செய்ய முன் வருகிறார்கள். சிந்திமொழிக்கெனத் தனியாக எழுத்து இருக்கிறது. அந்த எழுத்தைத் தொலைத்து விட்டு, தேவநாகரி எழுத்துக்களையே சிந்தி மொழிக்கும் உபயோகிக்க வேண்டும் என்று இந்திய சர்க்கார் தீர்மானித்து இருக்கிறது. இந்த முடிவைக் கண்டு கோபம் கொண்டிருக்கிறது, சிந்திமொழி—எழுத்துப் பாதுகாப்புக்காக உள்ள குழு. தங்களுடைய மனக் கொதிப்பைக் கண்டனமாகவும் ஆக்கி இருக்கிறது அக்குழு. அக் கண்டனத்தை இந்திய சர்க்காருக்கும் அறிவித்து இருக்கிறது அக்குழு.

சிந்தி மொழியை, அதற்கென உள்ள எழுத்துக்களால் எழுதாமல், தேவநாகிரி எழுத்தால் எழுதவேண்டும் என்ற இந்திய சர்க்காரின் முடிவை, சிந்தி மொழியை அழிக்க எடுத்துக் கொள்ளும் நடவடிக்கை என்றும், சிந்தி மொழியின் தேசீயத் தன்மைமீது தொடுக்கப்படும் போர் என்றும், அக்குழு கருதுகிறது. அத்துடன் எழுத்து மாற்றத்தால், சிந்திமொழியின் வளர்ச்சியும், இலக்கியமும் சீர்குலையவும், சிந்திமக்களின் கலாசாரப் பண்பாடு அழிந்து படவுமான நிலை ஏற்படும் என்றும் அக்குழு முடிவிற்கு வந்திருக்கிறது.

இது விஷயத்தில் இந்திய சர்க்காரின் முடிவை உடனடியாக மாற்றிக்கொள்ள வேண்டுமென்றும், ஒருவேளை இந்திய சர்க்காரின் விருப்பப்படியே சிந்தி எழுத்துக்களை மாற்றி தேவநாகரி எழுத்துக்களைப் புகுத்த வேண்டுமானால், ஜனநாயக முறைப்படி, சிந்தி மக்களின் பொது வாக்கெடுப்பின் மீது, இதனைச்செய்ய, இந்திய சர்க்கார் முன்வரவேண்டும் என்றும் அக்குழு வேண்டிக் கொண்டு இருக்கிறது.

ஒரு எழுத்து மாற்றத்தினாலேயே, ஒரு மொழியைப் பேசும் மக்களின் நாகரிகமும், கலைப்பண்பாடும், இலக்கிய வளர்ச்சியும் கெட்டுவிடும்என்று அஞ்சப்படுகிறது என்றால், எல்லாவகையிலும் மாறுபட்டுஇருக்கும் தமிழ்மொழியைத் தாய் மொழியாகக் கொண்டிருக்கும் மக்களிடம், வலுக்கட்டாயமாக இந்திமொழியைப் புகுத்துவதால், எந்த அளவு தமிழர்களின் எதிர்கால வாழ்வு பாதிக்கப்

படும் என்பதை, நமது எண்ணும் எழுத்தும் அறியாத மாகபருமம் தேசபக்தர்கள் அறிந்துகொள்ளவேண்டும்.

சிந்திமொழி அறிஞர்களின் போக்கைக் கண்டபிறகாவது, தமிழ் நாட்டு காங்கிரஸ் கனவான்கள், இந்தி வெறிகொண்ட தாண்டன் கும்பல், தமிழரின் தனிப்பெரும் சிறப்பைக் கெடுக்கவே, இந்தி மொழியை வலுக்கட்டாயமாகத் தமிழர்கள் மீது திணிக்க முடிவுசெய்திருக்கிறது என்பதை உணர்ந்துகொள்ள வேண்டும். தாண்டன் மொழி வெறியை எதிர்த்து நொறுக்கத் தமிழ்மொழியைத் தாய்மொழியாகக் கொண்ட காங்கிரஸ் கண்ணியவான்கள் முன்வரவேண்டும். ஒருவேளை, இதற்கு, காங்கிரஸ்காரர்களுக்குள்ள சொந்த இலாப நஷ்டக் கணக்கு இடம் கொடுக்காமல் இருக்குமானால், இந்தி மொழிக்கு வரவேற்புக் கூறும் பணியையும், இந்தியை எதிர்க்கும் நம்மைத் தூற்றித் திரியும் பணியையும் இன்றே நிறுத்திக் கொள்ளவாவது வேண்டும் இந்த நல்லுரைகள் நமது காங்கிரஸ்காரர்களுக்குப் புரியுமா என்பது சந்தேகம் தான்.

தமிழர்களுக்குக் கூறுகிறோம், சிந்தி மொழியினரின் மொழிப்பற்றைக் காணுங்கள் என்று. தங்கள் மொழிக்குள்ள எழுத்துக்களை மாற்றுவதைக் கூட அவர்கள் எதிர்க்கிறார்கள் என்கிற பொழுது, உயர்ந்த இலக்கியங்களையும், தனிசிறந்த வாழ்க்கை முறையையும், உள்ளடக்கி கொண்டிருக்கும் நமது தமிழ் மொழியினை, வேண்டுமென்றே அழிக்க வரும் அக்கிரமத்தைத் தடுக்க நமது தமிழ் மக்கள் முந்த வேண்டாமா என்று கேட்கிறோம். சிந்து மக்களின் விழிப்பையும், போக்கையும், மொழிப்பற்றையும், நமக்கு ஒரு உற்சாகம்தரும் படிப்பினையாகக் கொண்டு, வடவர்தம் சூதுமதியினை சுட்டெறிப்போம் வாரீர் என்று தமிழர்களை அழைக்கிறோம் அன்போடு.

## ஆற்றில் கரைந்த பெருங்காயம்!

இத்துணைக் கண்டத்தில் கல்விகற்றோர் மிகமிகக் குறைவு. இந்திய சர்க்காரின் சென்ற ஆண்டு கணக்குப்படி, இத்துணைக் கண்டத்தில் நூற்றுக்குப் பதினெட்டு நபர்கள் கல்வி கற்றவர்களாகக் கணக்கிடப் படுகிறார்கள். நமது மாகாணத்தில் இவ்வெண்ணிக்கைக் கொஞ்சம் கூடுதலாக இருக்கிறது. அதாவது நூற்று இருபத்திஒன்றரை நபர்கள் எழுதப்படிக்கத் தெரிந்தவர்கள் இம் மாகாணத்தில் இருக்கிறார்கள். இது நாம் பெருமைபடக் கூடிய விஷயம்தான்.

ஏறத்தாழ நூற்றுக்கு எண்பது நபர்கள், இம்மாகாணத்தில் கல்வி அறிவு அற்றவர்களாக இருக்கிறார்கள். சட்ட சபை உறுப்பினர்கள், நகராட்சி மன்றங்களின் உறுப்பினர்கள் போனற பொது வாழ்வில் ஈடுபட்டுக் கொண்டு இருப்பவர்களிலேயே, கையெழுத்து மட்டுமே போடத் தெரிந்தவர்கள் இருக்கிறார்கள் என்றால், சாதாரண மக்களில் எழுத்து வாசனையே தெரியாதவர்கள் ஏராளமாக இருக்கிறார்கள் என்பதில் ஆச்சரியமோ திகைப்போ கொள்ளவேண்டிய அவசியம் எவருக்கும் கிடையாது.

பதினைந்து ஆண்டுகளுக்குள்ளாக இத்துணைக் கண்டத்தில் உள்ள எல்லா சிறுவர்களுக்கும் கட்டாயஆரம்பக்கல்வி அளிக்க ஏற்பாடு செய்தாக வேண்டும் என்று இந்திய அரசியல் சட்டத்தில் ஒரு விதி செய்யப்பட்டிருக்கிறது. பள்ளி செல்லும் வயது வந்த எல்லா சிறுவர்களுக்கும், குறிப்பிட்ட ஆண்டுகளுக்குள், ஆரம்பக் கல்விக்கு ஏற்பாடு செய்து கொடுப்பது என்பது ஏட்டிலே கண்டுமகிழ வேண்டிய திட்டமாக இருக்க முடியுமே ஒழிய நடைமுறையில் கொண்டு வரக் கூடிய திட்டமல்ல என்று நமது மாகாண கல்வி மந்திரி எடுத்துக் கூறியுள்ளார். மாகாணங்களின் செல்வ நிலை அதற்கு இடம் கொடுக்காது என்று காரணமும் காட்டியுள்ளார்

சிறுவர்களுக்குத் தொடக்கக் கல்வி எல்லாவற்றினும் முக்கியம் என்பதை வற்புறுத்திக் கூறத் தேவை இல்லை. மக்களாட்சி முறை வெற்றிகரமாக நடைபெற வேண்டுமானால், அனைவரும் கல்வி கற்றிருக்க வேண்டியது இன்றியமையாததாகும். கல்வி பெற்றவர் தொகை எந்த அளவு கூடுதலாக இருக்கிறதோ அந்த அளவுக் கேற்பத்தான் ஆட்சியின் தரமும் இருக்கும். வாக்காளர்கள் எழுத்தறிவு அற்றவர்களாக இருப்பார்களானால், காலஞ் சென்ற பெர்னட்ஷா கூறியுள்ளதுபோல், அவர்களுக்குப் பிரதிநிதிகளாக ஆட்சிபீடத்தில் அமருகிறவர்கள் கயவர்களாகத்தான் இருக்க முடியும் என்பது பொய்யல்ல.

எல்லா சிறுவர்களுக்கும் தொடக்கக் கல்வி அளிக்க மாகாண சர்க்காரிடம் பணம் இல்லாதபொழுது, முதியோர் கல்வி என்று பணத்தைப் பாழ் செய்வது பொருத்தமுள்ளதும் ஆகாது; விரும்பக்கூடியதும் ஆகாது. முதியோர் கல்வி விஷயத்தில் செலவிடப்படும் பணத்துக்கேற்ப பலனும் உருவாகாது. இதற்காகச் செலவிடப்படும் ஒவ்வொரு காசும், முடிவில் ஆற்றில் கரைத்தப் பெருங்காயமாகத்தான் ஆகும்



முதியோர் கல்வி, காங்கிரஸ் கட்சியின் தேர்தல் பிரசாரத்துக்குப் பயன்படுத்தப்படலாம். முதியோர் கல்விக்கென பிரத்தியேகமாக நியமிக்கப்படும் ஆசிரியர்கள், மறைமுகமாகத் தேர்தல் பிரசாரத்தில் ஈடுபட பயன்படுத்தப்படுவார்கள் காங்கிரஸ் கட்சியினரால். இந்த ஒன்றைத் தவிர முதியோர் கல்வி வேறு எதற்கும் உபயோகமாகப் போவதில்லை. இதன் உண்மையை தேர்தல் காலத்தில் நமது மக்கள் காணத்தான் போகிறார்கள்.

செவிடர்களுக்கும் குருடர்களுக்கும் கல்வி போதிப்பது என்னும் ஏற்பாடு உயர்ந்ததோர் இலட்சியம் என்பதில் ஐயமில்லை. சிறந்த மனித அறம் என்பதிலும் குறைவில்லை. ஆனால், லட்சக் கணக்கில் வயதுவந்த சிறுவர் சிறுமியர்கள் எழுத்தறிவு பெற மார்க்கம் இல்லாமல் இருக்கின்ற பொழுது, இதற்குச் செலவிட பணம் இல்லை என்று பாடிக் கொண்டிருக்கின்ற பொழுது, நூற்றுக் கணக்கில் இருக்கிற செவிடர்களுக்கும் குருடர்களுக்கும் எழுத்தறிவிக்கிறேன் என்று பேசுவதும், அதற்காகக் காலணா அளவேனும் செலவிடுவதும் வெறும் கேலிக்கூத்தேயாகும்.

செவிடாக இருப்பவர்களுக்கு எழுத்தறிவிப்பதானால் அதற்காகச் செலவிடப்படும் பொதுமக்கள் வரிப்பணத்துக்கு ஈடாக, ஏதாவது பலனை இச்சமூகம் எதிர்பார்ப்பதில் பொருள் இருக்கிறது. சமூகத்திற்குத் தங்களால் முடிந்த அளவு சேவை செய்ய, அவர்களுக்குச் செவிடு ஒரு இடைஞ்சலாகவும் இருக்க முடியாது.

ஆனால், குருடராகப்போனவர்களுக்கு கல்விப் பயிற்சி அளிப்பதால், இச் சமூகம் பெறப்போகிற நன்மை என்ன என்பது தெரியவேண்டும். மேடு பள்ளமுள்ள எழுத்துப் புத்தகங்களை விரல்களால் தடவித் தடவிப் பார்த்துத்தான் குருடர்கள் எழுத்தறிவு பெற முடியும். அவர்களுக்காக உள்ள பள்ளிக்கூடங்களில் பெறுகிற கல்வியைத் தவிர, அவர்கள் வேறுவகையான கல்வி அறிவைப் பெறுவதற்கு, குருடர்களுக்கு வாய்ப்பே ஏற்படப் போவதில்லை, அவர்கள் சாகும் வரையில்.

பால்குடித்துக் குழந்தை மூச்சுத் திணறி இறந்துவிட்டது என்று ஒருவன் கூற, அதுகேட்ட குருடன் பால் எப்படி இருக்கும் என்று வினவ, பால் கொக்குபோல் வெண்மையாக இருக்கும் என்று சொல்ல, கொக்கு எப்படி இருக்கும் என்று கேட்க, கொக்கு இப்படித்தான் இருக்குமென்று மணிக்கட்டை வளைத்துத் தனது கையை காட்ட, தடவிப் பார்த்துவிட்டு, இவ்வளவு பெரிய வஸ்து குழந்தையின் தொண்டைக்குள் போனால் குழந்தை மூச்சுத் திணறி சாகாமல் எப்படி இருக்கும் என்று குருடன் கேட்டதாக ஒரு கதை சொல்வதுண்டு தமிழ் நாட்டில். இந்தக் கதைதான் நமது நினைவிற்கு வருகிறது, நமது சர்க்கார் குருடர்களுக்குக் கல்வி கற்பிப்பது கேட்டு.

முன்னிருந்த ஆங்கில ஏகாதிபத்தியம் இத்துறையில் முயற்சி எடுத்துக்கொண்டது. அதையே தொடர்ந்து காங்கிரஸ் சர்க்காரும் செய்துவருகிறது. ஆங்கிலேயர்களுக்கு ஏதாவது அதற்கான காரணம் இருக்கலாம். எவ்வளவோ நல்ல காரியங்களில் எல்லாம் ஆங்கிலேயர் வழியைப் புறக்கணித்து நடக்கும் காங்கிரஸ் சர்க்கார், இந்தக் குருடருக்குக் கல்வி போதிக்கும் விஷயத்தில் மட்டும் ஏனோ அப்படியே பின்பற்ற முயற்சிக்கிறது என்பது தெரியவில்லை.

வயதுவந்த சிறுவர்கட்கெல்லாம் ஆரம்பக் கல்வி அளிக்க ஏற்பாடு செய்துவிட்டு, அதன்பிறகு வேண்டுமானால் குருடர்களுக்கும் கல்வி அளிக்க ஏற்பாடு செய்வதின்மூலம், தங்களுடைய மனிதாபிமானத்தையும் ஜீவகாருண்ய சீலத்தையும் காட்டிக்கொள்ள காங்கிரஸ் சர்க்கார் முன்வருமானால் நாம் அதுகண்டு போற்றுவோமே ஒழிய குறைபட மாட்டோம். நாளை விஞ்ஞானிகளாக வரவேண்டியவர்கள், மருத்துவர்களாக வரவேண்டியவர்கள், இஞ்ஜினியர்களாக வரவேண்டியவர்கள் எல்லோருக்கும் வாய்ப்பளிப்பதை விட்டுவிட்டு, சமூகத்துக்கு எந்த வகையிலும் உடனடியாகப் பிரயோசனமாகாத குருடர்கள் கல்விக்குக் கால்துட்டளவு செலவிடுவதும் வீண் விரயமேயாகும்.

குருடர் செவிடர் கல்வி போதனையில் பயிற்சி பெற நான்கு ஆசிரியர்களை இங்கிலாந்துக்கு அனுப்பவேண்டுமென்று, இங்கிலாந்து சென்றுள்ள சென்னை சர்க்காரின் கல்வி இலாகா தலைவர் அரிய யோசனை ஒன்றை வெளியிட்டுள்ளார். அதனால்தான் நாம் குருடர் கல்வியின் அவசியமற்றத் தன்மையை, அதுவும் இச் சூழ்நிலையில் அதற்கு ஒரு துளியும் அவசியமே கிடையாது என்பதை வலியுறுத்தவேண்டியதாக இருக்கிறது.

நால்வர் இங்கிலாந்து சென்றுவர என்ன செலவாகும். அதற்குச் செலவிட சென்னை சர்க்காரிடம் பணம் இருக்கிறதா? அவர்கள் அங்கு போய், அங்

குள்ள குருடர் பள்ளிக்கூடங்களின் போதனமுறைக்காகச் செய்யப்பட்டுள்ள வசதிகளை எல்லாம் தெரிந்துகொண்டுவந்த பிறகு, அதே மாதிரி வசதிகளை இங்கும் செய்யவேண்டுமென்று அவர்கள் சிபார்சு செய்தால், அதை நடைமுறைக்குக்கொண்டுவர சென்னை சர்க்கார் தயாராக இருக்கவேண்டாமா? எதற்கும் பணமில்லை என்று சொல்லுவது போலவே, அதற்கும் பணம் இல்லை என்று சென்னை சர்க்கார் சொல்லாது என்பதற்கு என்ன உத்தரவாதம்? இங்கிலாந்து சென்று திரும்பும் நால்வர்களின் அறிக்கையை நூல்வடிவாக்கி சர்க்கார் புத்தக நிலையத்தில் வைத்திருப்பதற்காகவா நால்வர்களை இங்கிலாந்திற்கு அனுப்பும் காரியத்தில் சர்க்கார் ஈடுபட வேண்டும்? வேண்டாம், பயனற்ற பணியில் ஈடுபட வேண்டாம். பொது மக்கள் வரிப்பணத்தை ஊதாரித்தனமாகச் செலவு செய்ய வேண்டாம் ஆளவந்தார்களே, பெருங்காயத்தை ஆற்றில் கரைக்காதீர்; பலனொன்றும் இருக்காது அதனால்.

**யோசனையை ஏற்குமா?**

சென்னை சர்க்காரின் கல்வி இலாக்கா தலைவர், இங்கிலாந்து சென்றிருக்கிறார், அங்குள்ள பற்பல வகையான கல்வி போதன முறைகளையும் அநுபவ பூர்வமாக அறிந்துவர. ஆக்ஸ்போர்ட், கேம் பிரிட்ஜ், மான்செஸ்டர், எடின்பரோ ஆகிய நகரங்களில் உள்ள முதியோர் கல்வி நிலையங்களைக் கண்டிருக்கிறார். அங்கு போதிக்கப்படும் முதியோர் கல்வியின் அடிப்படை கோட்பாடு என்ன என்பதைத் தெளிவாகக் கூறியிருக்கிறார் பிரிட்டிஷ் முதியோர் கல்வியின் மூல நோக்கம் மக்களை சிந்திக்கத் தூண்டுவது தான் என்ற உண்மையை உணர்த்துகிறார். ஏராளமான விஷயங்களைக் குறித்து அவர்களிடம் சொற்பொழிவாற்றப் படுகிறது. சொற்பொழிவாளர்கள் கன்சர்வேடிவ் கட்சியினராகவும் இருக்கலாம் தொழில் கட்சியினராக வேனும் இருக்கலாம். தங்கள் வகுப்பில் உள்ள முதியோர் மாணவர் எது எதை அறிந்து இருக்கவேண்டியது அவசியம் என்று சொற்பொழிவாளர்கள் கருதுகிறார்களோ, அவைகளை எல்லாம், அவர்கள் தங்கள் சொற்பொழிவுகளில் விளக்கிக் கூறலாம். அவைகளைக் கேட்கும் முதியோர் மாணவர்கள், தாங்களாகவே சுயமாகச் சிந்தித்து ஒரு முடிவிற்கு வரும் வரையில், அவர்கள் சொற்பொழுவு செய்யும் ஆசிரியர்களின் கருத்துக்களுக்கு ஒத்துப் போகிறார்களா இல்லையா என்பதைப் பற்றிக் கவலை கொள்வதுகிடையாது.

இது இங்கிலாந்தின் முதியோர் கல்வியின் சிறப்பு. நமது நாட்டின் முதியோர் கல்விமுறையையுடன், பிரிட்டிஷ் முறையை ஒத்திட்டுப் பார்க்கவேண்டும்.

இங்கு எப்படி இருக்கிறது முதியோர் கல்வி? என்னென்ன பாடங்கள் அவர்களுக்குச்சொல்லிக் கொடுக்கப்படுகின்றன? இவ்வளவும் ஒரு புதிர் இங்கு. எழுதப் படிக்கக் கற்றுக்கொடுப்பதுதான் இங்கு முக்கியமாகக் கொள்ளப்படுகிறது. நிலநூல் அறிவோ, வரலாற்றின் உண்மையோ, அரசியல் ஞானமோ கற்பிக்கப்படுவது கிடையாது

இங்கிலாந்தில் தொழில் கட்சியின் சமூக பொருளாதார அரசியல் கருத்துக்களைக் கூறலாம் ஆசிரியர்கள். அதேபோல கன்சர்வேடிவ்களும் தங்கள் கட்சிக் கோட்பாடுகளைக் கூறலாம். சர்க்காரே இந்த ஏற்பாட்டைச் செய்திருக்கிறது.

ஆனால், இங்கோ, ஒரு கட்சியினர்தான், அதுவும் அதிகாரத்திலுள்ள காங்கிரஸ் கட்சியினர்தான், முதியோர் கல்வி நிலையங்களில் கால் எடுத்து வைக்கலாம். ஆசிரியர்களும், காங்கிரஸ் கட்சிக்குத் துதி பாடுகிறவர்களாகவே இருக்க வேண்டும். காங்கிரஸ் கோட்பாடுகளைத்தான், அந்த ஆசிரியர்களும் சொல்லலாம்.

இங்கிலாந்தில், முதியவர்களின் சிந்தனை சக்தியைப் பெருக்க போதனை தரப்படுகிறது. எல்லா உலகியல்களையும், ஒவ்வொரு அரசியல் கட்சிக்காரர்கள் எத்தகையக் கண்ணோட்டத்தோடு பார்க்கிறார்கள், அவைகளுக்கு எந்தெந்த வகையான பரிகாரங்களைக் கூறுகிறார்கள் என்பதை எல்லாம் அங்கு எடுத்துக்காட்டும் உரிமை அலுவல் பார்க்கும் ஆசிரியர்களுக்கு இருக்கிறது.

ஆனால், இங்கோ, முதியோர் கல்வி போதனையில், சுயமாகச் சிந்திப்பதற்கு இடமே வைப்பதில்லை. கட்டிக் கொடுத்தச் சோறுதான். கிளிப்பிள்ளைப் பேச்சுதான். மாரிக்காலத்துத் தவளை போக்குத்தான். பக்தியைப் பற்றி போதிப்பது! கடவுளர்களின் லீலா விநோதங்களின் சிறப்பைக் கூறுவது! பஜனைக் கூட மாக்குகிறது! ஏற்கனவே இருந்த கொஞ்சம் நஞ்சம் சிந்தனைப் பண்பையும் தொலைத்துக் கட்டுவது!

இங்கிலாந்தில் நடைபெறும் ஆட்சிக்கும் பெயர், மக்கள் ஆட்சிதான். இத்துணைக்கண்டத்தில் நடைபெறும் ஆட்சிக்கும் மக்கள் ஆட்சி என்றுதான் பெயர் சொல்லப் படுகிறது. இரண்டின் போக்கிலும் இருக்

(15-ம் பக்கம் பார்க்க)




# போர்வாள்

[ திராவிடர் வார வெளியீடு ]

வாள் 4 | திருவள்ளுவர் ஆண்டு 1981 ஐப்பசி 26 11—11—50 சனிக்கிழமை | வீச்சு 11


## ‘கண்ணன் காட்டிய வழி’

குல்லூக பட்டர் சக்ரவர்த்தி இராஜ கோபாலாச்சாரியார் சென்னை வந்தார். போலீஸ் படையும் தடியும் பாதுகாப்புத் தந்தன அவருக்கு. இதிலே மக்கள் கண்ணும் கருத்தும் சென்றுவிட்டது. எனவே, வந்தவர் என்ன செய்தார், என்ன கூறினர் என்னும் முக்கிய விஷயம் பின் தள்ளப்பட்டு விட்டது

போலீஸ் தடியடி தந்த தழும்புகள், ஏற்படுத்திய காயங்கள் ஆறிவிடும் சிலபல நாட்களில். ஆறியும் விட்டது. சம்பவமும் கொஞ்சம் கொஞ்சமாக மறைந்து வருகிறது நமது உள்ளத்திலிருந்து. ஆனால், அதுகாலை வேதவித்தகர் பேசி இருப்பது, என்றென்றும் நமது நினைவிலிருந்து மாறாது, மறையாது, நீடித்து நிலைபெற்று நிற்கும்.

அது சமயம், ஆச்சாரியாருக்கு இருந்த பல அலுவல்களிலே ஒன்று கே. பி இலட்சுமணராவ் என்பவரின் படத்தைத் திறந்து வைப்பது. தங்களுடைய வெறுப்பைக் காட்டிக் கொள்ளுவதற்காக, அமைதியானமுறையில், கருப்புக்கொடி காட்ட, கருப்புக் கொடிகளுடன் பல்லாயிரக் கணக்கான மக்கள் காத்துக் கிடக்கின்றனர் காலை முதல் மாலை வரையில். அவர்களின் எண்ணிக்கைக்கு இருமடங்கு அதிகமான தொகையினர், அதிகாரத்தைக் குறிக்கும் ஆடைகளால் தங்கள் உடலை மறைத்துக் கொண்டு, குண்டாந்தடிகளைத் தங்கள் கரங்களில் உறுதியாகப் பற்றிக் கொண்டு, அவ்வழியே போகிறவர் வருகிறவர்களை எல்லாம் பதம் பார்த்துக் கொண்டு இருந்தனர். இத்துடனும் நில்லாமல், கண்ணில் படுகிறவர்கள் ஒவ்வொருவரையும் அதிகார வண்டியிலே ஏற்றி, போலீஸ் நிலையங்களுக்கு அனுப்பிக் கொண்டு இருக்கின்றனர். இக்காட்சிகளைக் கண்கூடாகக் கண்டவர்களும், அதிகாரத்தின் அர்த்தமில்லாத ஆத்திரத்திற்கு ஆளானவர்களும், அதிகாரத்தின் ஆணவப் போக்கைக் குறித்து ஏதேதோ எண்ணிக் கொண்டு இருக்கின்றனர். அதிகாரத்தின் போக்கைப் பழிப்போர் சிலர்—தங்கள் இலட்சியம் விரைவினில் வெற்றிபெறும் என்பதின் முன் அறிவிப்பு இச் சம்பவம் என்று யூகித்து உணர்ந்து மகிழ்வோர் சிலர்—இப்படி பலப்பலர், பலவிதமாக அதிகாரத்தின் திருவிளையாடலைக் குறித்து எண்ணினர், முடிவிற்கு வந்தனர். இந்த எண்ணங்களையும் முடிவுகளையும் வாய்விட்டுக் கூறினோரும்உண்டு. தங்கள் விழிகளால் வெளிப்படுத்தினதோடு நின்றுவிட்டவர்களும் உண்டு. இப்படி இருந்தது, ஆச்சாரியார் காணாத, வெளியுலகச் சம்பவங்கள்.

அதிகாரத்தின் கோர விளையாட்டுகளை ஆச்சாரியார் புறக் கண்களால் காணவில்லையே யன்றி, அகக்கண் கொண்டு காணத்தான் செய்தார். அமைதியையும் ஒழுங்கையும் காக்க இருப்பதாகச் சொல்லப்படும் போலீஸ் படையினர் ஆடிய பேயாட்டத்தை, போலீஸ் அமைதிகாக்கப் புறப்பட்டால், எப்படி எப்படி இருக்கும் என்பதை, இம்மாகாணத்தில் முதல் அமைச்சராக அந்த நாள் இருந்தபோது, அநுபவ வாயிலாக அறிந்து இருப்பவர் தானே ஆச்சாரியார். சித்தவலசா, சீராளாவில், தொழிலாளர் மீது போலீஸ் படை, ஆச்சாரியார் அநுமதியுடன், துப்பாக்கிப் பிரயோகம் செய்ததையும், அது கண்டுதான் மகிழ்ந்ததையும், மகிழ்ந்ததோடு மட்டும் நிற்காமல் துப்பாக்கிப் பிரயோக அக்கிரமத்தை ஆதரித்துப் பேசியதையும் நாடு அறிந்ததானே இருக்கிறது. எனவே, ஆச்சாரியார் அநுபவ வாயிலாக ஏற்கனவே தெரிந்திருக்கிறார், போலீஸ் படையின் அமைதி காக்கும் அரும் பணியை.

வெளியிலே அதிகாரத்தின் ஏவலர்களான போலீஸ் படையினர், நிராயுதபாணிகளான பொது மக்களை தண்டம் கொண்டு தாக்குகிறார்கள். தாக்குண்டவர்களின் தேகத்திலிருந்து குருதி கிளம்பி மண்ணில்

குழைகிறது—உடன் இருந்த தோழர்களின் ஆடைகளைக் கறைப்படுத்துகின்றது. இது கண்டு மக்கள் பீதிகொள்ளுகின்றனர். இங்கும் அங்கும் ஓடுகின்றனர். இவ்வளவும் வெளியில்.

போலீசின் இவ்வளவு அக்கிரமச் செயல்களும் சரியாம். இந்த முறையில்தான் போலீஸ் படையினர் நடந்துகொள்ள வேண்டுமாம். இரக்கம் காட்டுவதோ, அன்பாக நடந்துகொள்வதோ கூடாதாம். தங்கள் அதிருப்தியை, அமைதியான முறையில் காட்டிக்கொள்ளக்கூடியிருக்கும் மக்கள் தீங்கிழைப்பதையே தொழிலாகக் கொண்ட கெடுமதியினராம். ஒரு காலத்தில் இத்தகு 'கிளர்ச்சி'க் காரர்களைக் கண்டால் தனக்கும் அனுதாபம் பிறந்ததுண்டாம். அக்காலத்தில், இவர்களை அடக்கி ஒடுக்க அதிகாரத்தின் சார்பில் எடுத்துக்கொள்ளப்பட்ட எல்லா நடவடிக்கைகளையும் தானும் கண்டித்ததுண்டாம். இருந்தாலும், இப்பொழுது, தான் கொண்டிருந்த முன்னாள் கருத்துகளை மாற்றிக்கொண்டாராம். அதிகாரவெறி தலைக்கேறி உள்ள ஆச்சாரியார், இது போலப்பேசி இருக்கிறார், பலத்த போலீஸ் பாதுகாப்புக்குள்ளே இருந்த நெடுஞ்சுவர் கட்டிடத்துக்குள்ளிருந்து கொண்டு, மிகமிகத் துணிச்சலுடன்.

கே. பி. இலட்சுமணராவ் நீதிபதியாக இருந்த காலத்தில், தென்னிந்திய இரயில்வே வேலை நிறுத்தம் நிகழ்ந்தது. அது சமயம் தொழிலாளர் தலைவராக இருந்த காலஞ்சென்ற சிங்காரவேலு செட்டியார், முகந்தலால் சர்க்கார் போன்றவர்களுக்கு பத்து ஆண்டு சிறை தண்டனைக் கொடுத்தார். ஆனால் அத்தண்டனை அப்பீலில் ஆறுமாதமாகக் குறைக்கப்பட்டுவிட்டது பின்னர். அக் காலத்தில் உயர் மன்ற நீதிபதிகள், தங்கள் தீர்ப்பின் மூலம், இலட்சமணராவின் இரக்கமற்ற செயலைக் கண்டித்துள்ளனர்.

இலட்சுமணராவ் தீர்ப்பளிக்கும் தன்மையைக் குறித்து ஆச்சாரியார் என்ன எண்ணி இருந்தார் என்பதை, ஆச்சாரியாரே கூறுகிறார்,

"அந்தக் காலத்தில் **நானே நினைத்ததுண்டு தரப்படும் தண்டனை மிகமிகக் கொடுமையானது என்று.**"

அதே ஆச்சாரியார், அதே விஷயத்தில், இப்பொழுது, எத்தகையக் கருத்தைக் கொண்டிருக்கிறார் தெரியுமா? இதோ ஆச்சாரியார் சொல்லுகிறார்,

"**அத்தகைய கொடுந் தண்டனை அளித்தது நிரம்ப சரி என்று இப்பொழுது தீர்மானிக்கிறேன்.**"

இந்த மனமாற்றத்துக்கு என்ன காரணம்? ஏன் இத்தகு முரண்பாடு ஆச்சாரியார் நடத்தையிலே இருக்கிறது? எல்லாம் கற்றவராயிற்றே அவர்? வேதத்தின் பொருள் தெரியும் அவருக்கு! வியாசரின் விருந்தளிக்கும் வகை தெரியும் அவருக்கு! கண்ணன் காட்டிய வழிக்குக் கருத்துரை பகரத்தெரியும் அவருக்கு! வள்ளுவர் குறளுக்கும் விருத்தியுரைதரும் தகுதி பெற்றிருப்பவராயிற்றே ஆச்சாரியார்! ஏன் முரண்படப் பேசுகிறார்? முன்பொருநாள் கண்டித்ததை, தூற்றினதை, பழித்ததை, தரையில் துப்பின தாம்பூலத்தை மீண்டும் வாயில் எடுத்துப் போட்டு சுவைப்பதுபோல, என் ஆச்சாரியார், முன்னாள் கொண்டிருந்த நினைப்பைமாற்றிக்கொள்கிறார்? இதில் எது தவறுடையது? எது சரியானது? ஆச்சாரியாரின் வாழ்க்கையில் காணப்படும் அந்தநாள் நினைப்பு சரியா? அல்லது இந்தநாள் எண்ணம் சரியா? எது? எது? ஏன் இந்த மனமாற்றம்? எப்படிவந்தது ஆச்சாரியாருக்கு இந்த மனமாற்றம்? ஆச்சாரியார் ஒவ்வொரு காலத்தில் கொள்ளும் கருத்துப்படிதான், நீதிவழங்கப்படுவதன் தன்மையும் முறையும் வகையும் மதிப்பிட்டுக் கொள்ளப்பட வேண்டிய ஒன்று? அல்லது நீதி வழங்குவதற்குஏதாவது நிரந்தரமானமதிப்பீடுஉண்டா? ஒருதனி மனிதனின் சொந்த நிலையில் ஏற்படுகின்ற மாற்றங்களுக்கு நெளிந்தும் குழைந்தும் உருவாவதற்குப் பெயர் நீதி என்பது தகுமா? ஒருவரின் விருப்பு வெறுப்புகளுக்கு அப்பாற்பட்ட நிலையில், என்றென்றும் மதிப்புக் குறையாமல், ஒளிவீசிக்கொண்டு, நிரந்தரமாக நிலைத்து நிற்பதன்றோ நீதி? நீதி, ஆச்சாரியாரின் வீட்டுச் சரக்கா? அல்லது அக்கிரகாரத்தில் மட்டுமே பாதுகாத்துவளர்க்கப்படவேண்டிய வக்கரபுத்தி படைத்த மட்டச்சரக்கா? பொதுமக்கள் சிந்திக்கவேண்டும் ஆச்சாரியார் நீதிக்குக் கொண்டிருக்கும் கோட்பாட்டை. ஆச்சாரியார், நாட்டுவிடுதலைக்காக ஆங்கிலேயரை எதிர்த்துப் போராடிய காந்தீயப் படையின் போர்வீரர்களிலே ஒருவர், அன்றைய ஆச்சாரியார் படை, சட்டத்தைமீறி நடக்குமானால், சட்டத்தை மதித்து நடக்கத் தவறுமானால், அதனை விசாரித்து, சட்டப் பத்தகங்களின் துணைகொண்டு, சட்டநூற்களில் குறிப்பிட்டுள்ளபடி, தண்டனை தருவதற்காக, வெள்ளை ஏகாதிபத்தியத்தால் நியமிக்கப்பட்டு, ஏகாதிபத்யத்தின் பாதுகாவலராக இருந்தவர் கே. பி. இலட்சுமணராவ். சட்டமோ வெள்ளைஏகாதிபத்தியம்தந்தது. நீதிமன்றமோ ஏகாதிபத்தியத்தின் ஏற்பாடு. நீதியளிக்க நியமிக்கப்பட்டு இருப்பவர்களோ ஏகாதிபத்திய ஏவலர்கள். எனவே, ஏகாதிபத்திய நீதிமன்றங்களிலே நேர்நீதி கிடைக்காது என்பது, ஆச்சாரியாரை ஒரு தொண்டராகக் கொண்டுள்ள நாட்டு விடுதலை படையின்உள்ளக்கிடக்கை. குற்றவாளிக்கூண்டிலே ஆச்சாரியார். நீதிபதி இடத்திலே இலட்சுமணராவ். ஆங்கிலேயர் ஆக்கிவைத்த சட்டபுத்தகம் வழிகாட்டி. இதைக்காணும் ஆச்சாரியார் ஒருமுடிவிற்கு வருகிறார். இலட்சுமணராவ் தீர்ப்பு கொடுமையானது என்று கொள்ளுகிறார். மனம் கொதிக்கிறார்—கோபப்படுகிறார்—குறைபடுகிறார் ஆச்சாரியார். இது அன்று!

இன்று வெறும் திருச்செங்கோட்டு காந்தி ஆசிரமத்தின் கதர்த்தொண்டராக இல்லை ஆச்சாரியார். நாட்டுக்கு அரசியல் விடுதலைகிடைத்து இருக்கிறது. ஆங்கிலேயர்கள் அகன்றுவிட்டனர். ஆங்கிலேயர்கள் விட்டுச்சென்ற அதிகார பீடத்தில், அன்று குற்றவாளிக் கூண்டிலே கால்கடுக்க, கருத்துக் குழம்ப நின்று கொண்டிருந்த ஆச்சாரியார் அமர்ந்திருக்கிறார். நிலைமை மாறிஇருக்கிறது. புதியநிலை பிறந்திருக்கிறது ஆச்சாரியாருக்கு. நினைப்பிலும் மாற்றம் காணப்படுகிறது.

ஆச்சாரியாரின் சொந்த விஷயத்தில் மட்டுந்தான் புதியநிலை—மாற்றம் ஏற்பட்டு இருக்கிறதேயன்றி, வேறு எதிலும் இல்லை, நாட்டிலே அந்த மாற்றம் தெரியவில்லை. நாட்டுமக்கள் வாழ்விலே மாறுதல் இல்லை. சட்டங்களிலே புதுமை இல்லை. ஆளும் போக்கிலே நூதனம் புகவில்லை. எல்லாம் ஏகாதிபத்தியவாடைதான். இன்னும் சொல்ல வேண்டுமானால் பாசீச நெடிநாற்றம் வீசுகிறது, ஆச்சாரியார் கட்சியின் கோணல் ஆட்சியிலே

அன்று கொடியவர்களாகப் பட்டவர்கள், இன்று குணாளர்களாகவும், அறிவும் ஆற்றலும் மிக்கோர்களாகவும் ஆச்சாரியார் கண்களுக்குப் படுகிறார்கள்

நாட்டு விடுதலை என்னும் பெயரினால், 'சட்ட'வரம்பு கடந்து செய்த 'நற்செயல்'கள் பலவும், ஆச்சாரியருக்கு இன்று கண்டிக்கத் தக்கதாகவும், வெறுக்கத் தகுந்ததாகவும், அடக்கி ஒடுக்கத் தகுந்ததாகவும், கடுமையாகத் தண்டிக்கத் தகுந்ததாகவும், தடி-கொண்டும் துப்பாக்கிக் கொண்டும் தாக்கத் தகுந்ததாகவும் படுகிறது.

**அன்று!**

"இதோ நாங்கள் நாட்டு விடுதலைக்காகப் போர் புரிகிறோம். ஆளும் அதிகாரத்துக்காக நாங்கள் கஷ்ட நஷ்டம் ஏற்றுக்கொள்ளுகிறோம். எங்களுக்கு நாடாளும் உரிமை தேவை. அதனைப் பெற நாங்கள் என்ன வேண்டுமானாலும் செய்வோம் எதுமாதிரியானாலும் நடந்துகொள்ளுவோம். இந்தச் செயல் சட்டத்திற்குட்பட்டதா, வரம்பு கடந்ததா என்றெல்லாம் நாங்கள் கவனிக்கத் தேவை இல்லை." இக்கோட்பாடு, நச்சுக்கொள்கை, அதிகாரத்துக்கு அங்கலாய்த்துக்கொண்டு கிடந்த ஆச்சாரியார் கும்பலின் அரசியல் சித்தாந்தம்.

**இன்று!**

"நாங்கள் நாடு ஆளுகிறோம். அதிகாரத்திலே நாங்கள் அமர்ந்து இருக்கிறோம். நாங்கள் எப்படி வேண்டுமானாலும் ஆளுவோம். நாங்கள் ஆளப்பிறந்தவர்கள். நாங்கள் அதிகாரம் செய்யப்பிறந்தவர்கள். எங்கள் பார்வையே சட்டம். எங்கள் நாவசைப்பே நீதி. போலீஸ் தடியே தக்ளி. துப்பாக்கியே கைராட்டை." இது அதிகாரத்திலே அமர்ந்துள்ள ஆச்சாரியாரின் அரசியல் அதிகார தத்துவ விளக்கம்.

இதில், மனுவின் உணர்ச்சி, நீதி, நேர்மை நிறைந்திருப்பதைக் காணவேண்டும் வாசகர்கள். ஆச்சாரியார் முன்னாள் சென்னை மாகாண முதல் அமைச்சராக இருந்தகாலத்தில், 'ஆண்டால் நாங்கள் ஆளவேண்டும் இந்த நாட்டை, இல்லையேல் துப்பாக்கி முனை ஆளவேண்டும்' என்று கூறியுள்ளதை நாம் இதுசமயம் நினைவுபடுத்திக்கொள்ள வேண்டும்.

அந்தக் காலத்து மனு, நீதி வழங்குவோன். அவ்வுரிமையை அவனுக்கு யார் கொடுத்தது? மக்களா, இல்லை. மக்களுக்கும் உரிமை உண்டு என்று எண்ணம் தோன்றாத காலம் அது. மனு தானாக எடுத்துக் கொண்ட, இல்லை, களவாடிக் கொண்ட உரிமை. தான் உயர்ந்தவன், சிறப்புடையவன், அனைவருக்கும் சட்டம் இயற்றும் உரிமை இயற்கையாகக் கொண்டவன் என்ற ஆணவத்திலே, சட்டமில்லா சட்டம் செய்தான் மனு. அதே உணர்ச்சியின் பிறப்பிடமாவும் இருப்பிடமாகவுந்தான் ஆச்சாரியாரின் உள்ளக்கிடக்கை இருக்கிறது. இது அவருக்கு மட்டுமே சொந்தமான கோட்பாடு என்று கொள்ளுவது கூடாது. காங்கிரஸ் கட்சியின் ஒருமித்த முடிவாகும் இது. இதனைத்தான் அதிகார பீடத்தில் அமர்ந்துள்ள ஆளும் வர்க்கத்தின் அரசியல் சித்தாந்தமாக கூறப்பட்டிருக்கிறது அரசியல் கலை கற்றவர்களால், இந்த நாடும், அதிகாரத்திலுள்ள காங்கிரஸ் கட்சி

யும் இத் தத்துவத்திற்கு மாறாக நடந்து கொள்ளாது-முடியாது.

சமுதாயத்துக் கேடு சூழ்பவர்களை, தங்கள் செயல்களால் தீங்கிழைப்பவர்களை, சட்ட விதிகள் எப்படி இருந்த போதிலும், அவர்களைப் பழிவாங்கும் நினைப்புடன் தண்டிக்கக்கூடாது; தாராள புத்தியுடன் குற்றங்களை கவனிக்கவேண்டும், மனித உணர்ச்சியையும் நீதி வழங்குவதில் துணையாகக் கொள்ள வேண்டும், என்று நீதி வழங்கும் தன்மையில் புரட்சிகரமான மாறுதல் சிறுகச் சிறுக புகுத்தப்பட்டு வந்திருக்கிறது.

காதில் ஈயத்தைக் காய்ச்சி ஊற்றவேண்டும்; நாக்கைத் துண்டிக்கவேண்டும்; புட்டத்தைச் சிதைக்கவேண்டும்; கைகளைத் துண்டிக்கவேண்டும் என்று அக்காலத்து மனு, நீதிவழங்கியுள்ளதற்கும், இக்காலத்து ஆச்சாரியார் குற்றவாளிகளை இரக்கம் காட்டாமல் கடுந்தண்டனை அளிக்கவேண்டும் என்பதற்கும் உள்ள மன ஒற்றுமையை கூர்ந்து கவனிக்கவேண்டும் வாசகர்கள். காலந்தான் மாறிற்றே ஒழிய, அதிகார வெறியர்களின் கருத்தில் எந்த வித மாறுதலும் ஏற்படவில்லை, ஏற்படுவது கடினம் என்பதற்கு இது ஒன்றே போதும்.

மனிதாபிமானம் படைத்தவர்களால் சிறைச்சாலைகள் சீர்திருத்தச்சாலைகளாக இருக்கவேண்டுமேயல்லாது கொடுமை பல புரியும் சித்திரவதை மண்டபங்களாக இருக்கக்கூடாது என்பதற்கு நல்லறிஞர்கள் பலரும் தங்கள் எழுத்தாலும், பேச்சாலும் செய்துள்ள சேவை ஏராளமாக இருக்கிறது. ஒருவன் திருடுகிறான், கொலை செய்கிறான், அடித்து இம்சிக்கிறான், என்னும் கேடான காரியங்களுக்கெல்லாம் காரணங்களைக் கண்டு பிடித்து, அக்காரணங்களைக் களைத்தெறிய சமுதாயத்தையே சீர்செய்து செப்பனிடும் அரும்பணியில் ஈடுபடுவதுதான் சிறந்ததென்று முடிவிற்கு வந்து, அதற்கான சிறந்த நடவடிக்கைகளை எடுத்துக் கொள்வதில்தான் சமுதாயம் வளர்ச்சியடையவும், முன்னேற்றம் பெறவும் முடியும் என்று சிலபலர் பாடுபட்டு வருவதும் வெறும் கதையல்ல. இத்தகு சூழ்நிலையில்தான் ஆச்சாரியார் கூறுகிறார்,

"உறுதியான அரசமைப்பிலும், குற்றவாளிகளைக் கடுமையாக தண்டிப்பதிலும்தான் நாகரிக வளர்ச்சி இருக்கிறது," என்று

குற்றவாளியின் குணவிசேஷங்களை ஆச்சாரியார் சுட்டிக் காட்டுவதாவது, 'குற்றவாளி விசாரணை செய்யாமல் தண்டனை தருகிறான். அவன் இரக்கம் காட்டுவதில்லை. குற்றவாளியிடம் தாராள புத்தியும் பச்சாதாபமும் காட்ட வேண்டும் என்று நாம் கூறுகிறோம். கொடுமையாக நடந்துகொள்ளும் ஏவனும் பிறருடைய அனுதாபத்தை இழந்தவனேயாகிறான்."

ஆளுவோருக்கும் ஆளப்படுவோருக்கும் இது பொதுவிதியாகும்.

எவ்வளவு பழிவாங்கும் ஆசை, இரக்கமில்லா அரக்கத்தன்மை, அதிகார போதையால் சிறந்த அறிவை இழந்துகிடக்கும் ஆச்சாரியாருக்கு இருக்கிறது பார்த்தீர்களா? மனுவின் கொடுங்கோன்மை உணர்ச்சிக்கும் அதிகாரத்திலுள்ள காங்கிரஸ் ஆச்சாரியாரின் உணர்ச்சிக்கும் ஏதாவது கடுகத்தனை வேற்றுமையாவது காண முடிகிறதா என்று பாருங்கள். கொடுங்குற்றவாளிகளை சட்டத்தின் கட்டளைப்படி தண்டிக்கக் கூடாது என்பதல்ல நமது வாதம். அத் தண்டனை, குற்றவாளியை சீர்திருத்துவதாக இருக்கவேண்டும் என்பதுதான் நமது ஆசை-கட்சி.

அதிகாரத்தில் அமர்ந்த பிறகு இரக்கத்தை இரண்டுகாத தூரத்துக்கு விரட்டி அடித்துவிட்டு, இப்படிப்பேசுகின்ற ஆச்சாரியார் தான், நாட்டுப்பற்றினால் உந்தப்பட்டு, விடுதலை வேட்கையால் தூண்டப்பட்டு, வெள்ளை அதிகாரிமீது கொலையினும் கொடிய குற்றமான, கேவலமான குற்றவாளிகளும் செய்வதற்கு அஞ்சும், திராவகத்தை ஊற்றிய காங்கிரஸ் தொண்டர்களான காசிராஜன், இராஜகோபால் உயிர்களை மீட்க, அதிக முயற்சி எடுத்துக் கொண்டு வெற்றியும் பெற்றார் ஆச்சாரியார். அதிகார பீடத்தில் அமர்ந்தபிறகு ஆச்சாரியார், குற்றவாளிகளுக்குக் கொடுந்தண்டனை தருவதுதான் நீதியின் லட்சணம், கொடுமையாக நடந்துகொள்வதில்தான் நீதிபதிக்குப் பெருமை இருக்கிறது, என்று போதிக்கிறாரே, இதே போக்கை, காசிராஜன் இராஜகோபால் உயிருக்காக ஆங்கில வைசிராயிடம் மன்றாடியபோது, ஆச்சாரியாரிடம் கூறிஇருந்தால், அது எப்படி குற்றமுடையதாகும்? அதற்கு ஆச்சாரியார் என்ன பதில் கூறிஇருக்கமுடியும்? வேதனை கலந்த வெட்கம்!

வெள்ளை ஏகாதிபத்தியவாதிகளான லாரன்ஸ், நீலன், ஓடயர், வெல்லிங்டன் கல்லறைகள், கேலி பேசும், குலுங்கக் குலுங்கச் சிரிக்கும், ஒருகாலத்தில் அடக்குமுறைகளைக் கண்டித்து, கொடிய நீதி வழங்கும் முறைகளை எதிர்த்துக் கிளர்ச்சி செய்த மாவீரர், கொடுந்தண்டனை அளிப்பதற்குத் தூபமிடுவது கண்டால்!

ஆச்சாரியாரிடம், அரசியல்குற்றவாளிகள் என்றோ, வேறு கிரிமினல் குற்றவாளிகள் என்றோ குற்றம் இழைப்பவர்களைப் பிரித்துப் பார்த்துப் பேசும் நல்ல புத்தி இல்லை. எப்படி வரும்? எப்படி இருக்க முடியும்? எல்லோரையும் சட்டத்தை மீறுகிறவர்கள் என்றே ஒரே இனத்தில் சேர்த்துப் பேசுகிறார் ஆச்சாரியார். அதற்கு ஒரு குறள் வாக்கியத்தையும் ஆதாரமாகக் காட்டுகிறார்.

அவ்வாக்கியம் வருமாறு:—

"கொலைமிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ் களைகட் டதனொடு நேர்."

உழவன் களையைக் களைந்து பயி

(14-ம் பக்கம் பார்க்க)



# திராவிடப் பாசறையில் பல்லாயிரக்கணக்கான மாணவர்கள்

## இதுவரை கண்டிராத உணர்ச்சி வெள்ளம்

### ஆளவந்தார்களுக்கு மாணவர்களின் அறைகூவல்

**8—11—50 சென்னையில் நடைபெற்ற திராவிட மாணவர் முன்னேற்றக் கழக மாநாடு**

திராவிடர் மாணவ முன்னேற்றக் கழக முதல் மாநாடு, சென்னை அரண்மனைக்காரத் தெருவிலுள்ள செய்ண்ட் மேரி மண்டபத்தில், 8-11-50 புதன் கிழமை காலை 8 மணிக்கு நடைபெற்றது.

காலை 7 மணியிலிருந்தே, தமிழ்நாட்டுப் பல பகுதிகளில் இருந்தும் மாணவப் பிரதிநிதிகளும், தி. மு. க. வைச் சேர்ந்த தோழர்களும் கூட்டம் கூட்டமாகக் கூட ஆரம்பித்து விட்டனர். அனைவரும் இளம் காளைகள். உணர்ச்சி உருவங்கள். கொள்கைப் பற்றையும், அதை நிறைவேற்றும் நெஞ்சத் துணிவையும் அவர்கள் விழி காட்டிக் கொண்டு இருந்தது.

பெரிய மண்டபத்தின் உள்ளெங்கும் மாணவர்கள் திரண்டிருந்தனர். மண்டபத்தைச் சுற்றியுள்ள வெளிகளில் எல்லாம் மாணவமணிகளின் கூட்டங்கள். மண்டபத்திற்கு எதிரில் உள்ள பரந்த தெருவெங்கும் மொய்த்துக் கொண்டு கிடந்தனர் மக்கள். முதியோர்கள் இல்லை அங்கே. வயோதிகர்கள் இல்லை அங்கே. எல்லாம் இளைஞர்கள். எல்லாம் செயலாற்றும் வீரர்கள். திராவிடம் காணத் துடிதுடித்துக் கொண்டு நிற்கும் இளம் சிங்கங்கள்.

குறிப்பிட்ட நேரத்தில் மாநாடு தொடங்கிற்று. மாநாட்டின் துணைச் செயலாளர் சென்னை மாணவர் தோழர் கண்ணன் மாநாடு தொடங்குவதை அறிவித்து, மாநாட்டின் வரவேற்புக் குழுத் தலைவர் கே. ஏ. மதியழகன் அவர்களை மாநாட்டினர்களுக்கு அறிமுகம் செய்துவைத்தார்.

தோழர் மதியழகன், திராவிட முன்னேற்ற மாணவர் கழகத்

தொடக்கத்தின சரித்தத்தையும், திராவிடத்தின் அக்காலச் சிறப்புகளேயும், இன்று பெற்றுள்ள இழிநிலையையும், அதற்கான விடுபடுமார்க்கத்தையும், அதில் திராவிட மாணவர்கள் ஆற்ற வேண்டிய தொண்டின் விரிவையும், மற்ற நாடுகளில் நாட்டின் முன்னேற்றத்திற்காக மாணவர்கள் எடுத்துக்கொண்ட வரலாற்று உண்மைகளேயும் சுருக்கமாக, ஆனல் விளக்கமாக எடுத்துக்கூறி, மாணவப் பிரதிநிதிகளேயும், மற்றத்தோழர்களேயும் இன்முகம் காட்டி வரவேற்று நின்றார்.

அறிஞர்எழு, திராவிடத்தின் எழுஞாயிறு, திராவிடத்தை உருவாக்கும்தனிப்பெரும் சிற்பி, அறிஞர் அண்ணுதுரை, தனது சிறப்பு விழாச் சொற்பொழிவைத் தொடங்கினர். இடையிடையே கைதட்டலும், சிரிப்பும், ஆரவாரமும் எழுந்த வண்ணம் இருந்தன. திராவிட நாட்டின் அந்த நாள் சிறப்பியல்புகள் அனைத்தையும், வரலாற்றினை வழித்துணையாகக்கொண்டு விளக்கினர், காங்கிரஸ் வீணர்கள் வாயடைத்து வெட்கித்தலே குனியும் வண்ணம். திராவிட நாடு கேட்பதை ஆந்திரர்கள் ஆதரிப்பதில்லை, கன்னடர்கள் கருதுவதில்லை, கேரளர்கள் கண்ணெடுத்துக்கூடப் பார்ப்பதில்லை என்று சில வக்கிரங்கள் கதைத்துத் திரிகின்றனவே, அதற்கு அருமையானதோர் பதில் தந்தார் அண்ணு. இது வரையில் அவர் எங்கும் சுட்டிக்காட்டாதது அக்கருத்து. அதாவது, பாகிஸ்த்தான் கேட்ட ஜின்ன பம்பாய் வாசி. அதை சிறு மாறுபாடும் இல்லாமல் ஆதரித்து நின்ற லியாகத் அலிகான் ஐக்கிய மாகாணக் குடி. ஆனல் அதை எதிர்த்த அல்லா பக்ஷ் சிந்து வட்டாரத்தைச் சேர்ந்தவர் எல்லைப்புற காந்தி என்ற கபார்கான் முழு மூச்சாக எதிர்த்துப் பேசிவந்தார். இருந்தாலும் பாகிஸ்தான் பெற்ருர் ஜின்ன. அதைப்போல தமிழர்கள் மட்டுமே திராவிட நாடு கேட்பதில் என்னகுறை இருக்கிறது என்று கடாவினர் அறிஞரில அறிஞர்.

திராவிடநாடு பிரிந்தால் சிறிய நாடாக இருக்குமே, பிறர் படை எடுப்பு நேர்ந்தால் அதனை திராவிட நாட்டால் தடுத்துக்கொள்ள முடியாமல் போகுமே என்ற போலிவாதத்திற்கும், சம்மட்டி அடிகொடுத்தார் திராவிடத்தின் மங்கா விளக்கு. அதாவது இத்துணைக் கண்டத்தின் மீது, இதே சமயத்தில் வேறு எந்த நாடாவது படை எடுத்தால் எப்படி காப்பாற்ற இருக்கிறது இந்திய சர்க்கார் என்றும், காஷ்மீர் விஷயம் சென்ற மூன்று ஆண்டுகளாக முடிவு பெருமல் இருப்பதின் உட்பொருள் என்ன என்றும் கடாவுவதின் மூலம், சுடச்சுட பதில் தந்திருக்கிருர், கதர் சட்டைக்காரர்களின் சிந்தனைக்கு.

ஒன்றரை மணி நேரத்திற்கு அதிகமாகவே அண்ணு அன்று பேசி இருக்கிருர். மாநாட்டில் குழுமியிருந்தோர், அண்ணுவின் வாயில் இருந்து வெடித்துக் கோர்வையாகக் கிளம்பும் சொற்கள் தோற்றுவிக்கும் நானுவிதமான உணர்ச்சிகளுக்குக் கட்டுப்பட்டு, தங்களே மறந்தவர்களாக வீற்றிருந்தனர் ஆயிரக் கணக்கான மாணவர்களும், மற்றவர்களும்.

பின்னர்தலைவர்தோழர் இரா. சத்தியேந்திரன் B. A, BL., அவர்களேத்தலைமை ஏற்குமாறு, தோழர்கள் K. A. மதியழகன் முன்மொழிய, ஸ்டான்லி மெடிகல் காலேஜ் சார்பில் S. A. கபீர் பின்மொழிய, சட்டக்கல்லூரி சார்பில் P. R. கோபாலகிருஷ்ணன், பச்சயப்பன் கல்லூரி சார்பில் T. விஸ்வநாதன், விவேகாநந்தர் கல்லூரி சார்பில் திருநாவுக்கரசு, ஆசிரியர் கல்லூரி சார்பில் புலவர் நன்னன், பொறிக் கல்லூரி சார்பில் மெய்யப்பன், கிருஸ்துவக் கல்லூரி, சர்க்கார் ஆர்ட் கல்லூரி சார்பாக இரு மாணவக்கள், வழி மொழிய, தோழர் இரா. சத்தியேந்திரன் மாநாட்டின் தலைமையை ஏற்று, தனது தலைமை உரையை ஆற்றினர். அவரை அஜீசமயம் பீடித்திருந்த வெப்பநோய், அவரை அதிகநேரம் பேச அனுமதிதாவில்லை திராவிடநாடு பிரிவதின் அவசியத்தை மட்டும் சுருக்கமாக, இரண்டொரு வார்த்தைகளில் விளக்கினர்.

தலைமை உரைக்குப் பிறகு, சென்னை, 'சண்டே அப்சர்வர்' ஆசிரியர் P. பாலசுப்ரமணியம் அவர்கள், தனக்கு இயல்பாக இருக்கும் கண்டன தொனி கொண்டு, ஆங்கிலத்தில் ஆளவந்தார்களுக்கு அறிவுரை கூறினர்.

இடைவேளைக்குப் பிறகு மாநாடு மீண்டும் கூடிற்று. சிறப்பானத் தீர்மானங்கள் சில (மற்றோர் பக்கத்தில் பார்க்க) மாணவத் தோழர்களால் கொண்டுவரப்பட்டும் ஆதரித்துப் பேசப்பட்டும் ஒரேமனதாக, நிறைவேற்றப்பட்டன.

மாலைநிகழ்ச்சியில், பன்மொழிப் புலவர் K. அப்பாதுரை M.A., L.T., அவர்களும், இரா. நெடுஞ்செழியன் M. A., அவர்களும் சிந்தனை விருந்து பரிமாறினர் மாநாட்டினருக்கு. தலைவர் முடிவுரையுடனும், மாநாட்டுச் செயலாளரின் நன்றி கூறலுடனும் மாநாடு இரவு 7-30 மணிக்கு முடிவுற்றது.



இரு வேளைகளிலும் மாநாட்டில் கலந்து கொண்டவர்களில் சிலர் வருமாறு:—

K. அப்பாதுரை, P. பாலசுப்ரமணியம், E. V. K. சம்பத், S. முத்தையா (முன்னுள் அமைச்சர்) மா. இளஞ்செழியன், முனிசாமி M.C. T.M. பார்த்தசாரதி, பஞ்சாட்சரம், S.V. லிங்கம், இரா. நெடுஞ்செழியன், செழியன், வாணன், K. கோவிந்தசாமி, டாக்டர் கணேசன், C. V. இராஜன், காஞ்சி மணிமொழியார், K.M. கண்ணபிரான், ஆ. இளங்கோவன் (துணை ஆசிரியர், பிரசண்ட விகடன்) இராம. அரங்கண்ணல் (துணையாசிரியர், திராவிட நாடு) தில்லை வில்லாளன் (துணை ஆசிரியர், திராவிடநாடு) P. வீரராகவன், (துணை ஆசிரியர், ஆரம்பக்கல்வி) நடிகவேள் M.R. ராதா, A.R. சேஷாசலம், T. சண்முகம், டாக்டர் தருமாம்பாள், செல்வக்கண்ணம்மாள், அலர்மேலு அப்பாதுரை, இன்னும் பலருமாவர்.

---

**படிக்கவேண்டிய புதிய நூல்கள்**

சுவைமிக்க வாழ்க்கைச் சித்திரம்

...முழு நீள நாவல்கள்...

| | | | |
|---|---|---|---|
| "வாத்தியாரம்மா" (ரா. தணலன்) | 0 | 4 | 0 |
| "கன்னிகையா விதவையா?" (மூர்த்தி) | 0 | 8 | 0 |
| "வஞ்சகி" (சேரன்) | 0 | 8 | 0 |

**ஆராய்ச்சி நூல்**

| | | | |
|---|---|---|---|
| வள்ளுவரும் காந்தியும் (மு. கோவிந்தசாமி B.O.L) | 0 | 4 | 0 |

விற்பனைக்கழிவு 25%.

செலவு இலவசம்

விபரங்களுக்கு:—

**மின்னல் பதிப்பகம்**

புதுச்சேரி. (F. I.)

# இந்தித் தூதுகோஷ்டிக்கு அறிவுறுத்தல்

## பேதபுத்தி கூடாதென போதனை

### 'இந்து' இதழில் திருப்பத்தூரார் கடிதம்

இந்தி மொழியினை, தமிழ் மக்களிடை செல்வாக்குப்பெறச் செய்வதற்கென, வடநாட்டு இந்திமொழிப் பற்றினர் சிலர், சில நாட்களுக்குமுன் தமிழ் பேசும் மக்களைக் கண்டு பேசி விட்டு, சொந்த நாட்டுக்குத் திரும்பிவிட்டனர். அவர்கள் இங்கு இருந்தபொழுது பேசிய பேச்சுகளில் குறிப்பிடத்தகுந்தது, தென்னுட்டவர் வடக்குத் தெற்கு என்று பேசும் பேத புத்தியை விட்டுவிட வேண்டுமென்று, ஒவ்வொரு இடத்திலும்வலியுறுத்திக்கூறியதுதான். இச்சமரச ஒதத்தைக் கேட்டு, நாம் எந்தவித சிந்தனையும் கொள்ளவில்லை. காரணம், வந்தவர்களின் முன்னுள் வரலாற்றையும், நிகழ்கால நடைமுறைகளேயும் நாம் நன்கறிந்தவர்களாக இருப்பதேயாகும்.

ஆனல், திருப்பூர் தோழர் ஒருவருக்கு அந்தத் தூது கோஷ்டியினரின் பேச்சு அதிர்ச்சியைக் கொடுத்திருக்கிறது. எஸ். வெங்கிடராமன் என்பது அவர் பெயர். அவர் எழுதியுள்ளார் ஒரு சிறு கடிதம், சென்னையில், 7-11-50 காலே வெளியான 'இந்து' இதழில்.

அக் கடிதத்தை, அப்படியே தமிழ் ஆக்கித்தருகிறோம். அது, இது.

"ஐயா, இந்தி நல்லெண்ணத் தூதுகோஷ்டியின் தலைவரான சந்திரபால் பாண்டே என்பவர், தென்னுட்டு மக்கள், வடக்குத் தெற்கு என்ற வித்தியாசத்தைக் கட்டாயம் மறந்துவிட வேண்டும் என்று தனது சமீபகால பேச்சுகளில் குறிப்பிட்டிருக்கிருர். நல்லெண்ண கோஷ்டியின் தலைவரையும், அதன் உறுப்பினர்களேயும், அலகாபாத் இந்தி பல்கலை கழகத்தினரையும், அதே வேற்றுமை புத்தியை மறந்துவிடுமாறு கேட்டுக் கொள்ளுகிறேன். எடுத்துக் காட்டாக, 1948-ம் ஆண்டு முதல் சென்னை தட்சண பாரத் இந்தி பிரசார சபையின் பரிட்சையில் ஆர். பி. வி. (R.B.V.) பட்டம் பெற்றுத் தேர்ந்தவர்களை, அலகாபாத் சாகித்திய சம்மேளனத்தில் நடைபெறும், சாகித்திய விசாரத் பரிட்சையில் கலந்துகொள்ள அனுமதிப்பது கிடையாது. 1948 வது ஆண்டுவரையில், இதற்கு விதிவிலக்கு அளிக்கப் பட்டு வந்து, அதன் பின்னர் மறுக்கப் பட்டுவிட்டது. ஆனல், இந்தி சாகித்திய சம்மேளனத்திலிருந்து சமீபத்தில் எனக்குக் கிடைத்தக் கடிதத்தில், ஆர். பி. வி. பட்டம் பெற்ற வர்களுக்கோ அல்லது ஆர். பி. பி. (R. B. P.) பட்டம் பெற்றவர்களுக்கோ இதுவரையில் (அலகாபாத் இந்திக் கல்லூரியின் பரிட்சையில் கலந்துகொள்ள) விதிவிலக்கே அளித்தது கிடையாது என்று எழுதப்பட்டு இருக்கிறது. அவர்கள் தவருகக் கூறுகிருர்கள் என்று நான் நினைக்கிறேன். இது விஷயத்தில், நல்லெண்ணகோஷ்டி கருத்தைச் செலுத்துமா?

திருப்பூர்

எஸ். வெங்கடேராமன்

கடிதமே விளக்கமாக இருப்பதால், நாம் மேலும் ஆராயத்தேவை இல்லை என்று கருதுகிறோம். 'வடக்குத் தெற்கு எனப் பேசாதே' 'என்னைப்பார் — என் பலத்தைப்பார்' 'தெற்கின் கண்ணைத் திறந்துஉங்கள் அனைவரையும் சாம்பலாக்கி விடுவேன்—எச்சரிக்கை' 'இனைத்தை முடிக்கும் ஆலகாலன் நான்' என்றெல்லாம் ஆகாயத்தில் வாள்வீச்சு வீசித்திரிகிறரே, பெரும் கனம் காமராஜர், அவருக்கு இதனைத் தரும் ஜேர்-காணிக்கையாக.

—

(10-ம பக்கத் தொடர்ச்சி)

ளைக் காப்பதுபோல், அரசன் கொடியவர்களைத் தணடித்து சமூகத்தைக் காப்பாற்றவேண்டும், என்பது அக் குறள்பாவின் கருத்துரையாகும். இக் குறளைக் கூறின ஆச்சாரியார், அரசன் அல்லது அதிகாரத்தில் இருப்போர் எப்படி இருக்கவேண்டும் என்பதற்கு திருவள்ளுவர் வேறு ஒரு குறளால் உணர்த்தி இருக்கிருர். அதனை இங்கு குறிப்பிடுகிறேம், ஆச்சாரியாருக்காக அல்ல, அவருடன் சேர்ந்துள்ள மற்றவர்களுக்காக.

**"கடுமொழியும் கையிகந்த தண்டமும் வேந்தன் அடுமுரண் டேய்க்கு மரம்."**

கடிய சொல்லும், குற்றத்துக்கு அதிகமான தண்டனையும், அரசனது செல்வாக்கைத் தேய்க்கும் அரம்போன்றது என்பதாகும்.

கே. பி, இலட்சுமணராவுக்கு ஏற்பட்ட அபவாதம் எல்லாம, பொதுவாக அவர் நீதி வழங்கும் முறையில், ஏகாதிபத்திய அதிகார வர்க்கத்தைத் திருப்தி செய்யும் போக்கில், அவர் அறிந்தோ அறியாமலோ, இருந்துவிட்டது என்பதுதான். எடுத்துக்காட்டாக அரசியல் காரணத்தை அடிப்படையாகக்கொண்டு எழுந்த தென்னிந்திய இரயில்வே வேலை நிறுத்தத்தில், வேலை நிறுத்தத்துக்கு மூல புருஷர்களாக இருந்த தொழிலாளர் தலைவர்களிடம் தாராள புத்தி காட்டாது, கடுமையாகத் தண்டித்ததினுல்தான், அவருக்கு அபகீர்த்தி ஏற்பட்டது. ஆச்சாரியார் இன்று புகழ்ந்து கூறும், இலட்சுமணராவின் மனப்போக்கின் விளைவு என்ன? அவர் எந்த ஏகாதிபத்தியத்தைக் காப்பாற்ற எந்த ஏகாதிபத்தியத்தின் நற்சாட்சிக்காக, குற்றவாளிகளை, அவர்கள் செய்த குற்றம் எதுவானலும், சட்டத்தில் உள்ளபடி கடுமையாக தண்டித்துவந்தாரோ, அதே நடவடிக்கைகள், காங்கிரஸ் தலைவர்கள் ஏற்றுக்கொண்டு இன்றும் பெருமையாகப் பேசிவருகிறபடி, ஏகாதிபத்திய முடிவிற்கே துணையாக நின்றது. இதுதான் காங்கிரஸ் தலைவர்களின் வாதப்படி தர்க்கரீதியாகப் பெறப்படும் முடிவாகும். இதே முடிவை இன்றைய காங்கிரஸ் ஆட்சியின் போக்குடன் ஒப்பவைத்து நோக்குவோமானுல் அதே தர்க்கரீதியான முடிவிற்குத்தான் எவரும் வருவர்.

**"இலட்சுமணராவ் நடந்து காட்டியதை முன்மாதிரியாகக் கொண்டு மற்ற நீதிபதிகள் நடந்து கொள்ள வேண்டும்"**

நீதிபதிக்கு, அதிகாரத்தை ஆலிங்கனம் செய்து கொண்டு இருக்கும் ஆச்சாரியார் கூறும் அரிய யோசனை இது. இரண்டும் இரண்டும் நான்கு என்னும் பொழுது, நான்கும் நான்கும் எட்டு என்றுதானே கொள்ள வேண்டும். இது எல்லோருக்கும் சாதாரணமாகப் புரியும் விஷயம். நிற்க,

ஆச்சாரியாருக்குத், தங்கள் அதிருப்தியைக் காட்டிக் கொள்ள, சட்டத்தைத் துளியும் மீருமல், அமைதியான முறையில், கருப்புக் கொடி காட்டப் பெரும் கூட்டமாகக் கூடி இருந்த மக்களை, மிருகத்தனமாக, எதவித அவசியமும் ஏற்படாத நிலையில், தடிகொண்டு தாக்கிய போலீஸ் படையும், நீதிபதிகளுக்குப் புரிந்த அதே உபதேசத்தைத்தான், தாங்களும் ஏற்றுக் கொண்டு நடக்க வேண்டும் என்று போலீஸ் தீர்மானித்துக் கொண்டாலோ, அல்லது ஆச்சாரியாரின்உபதேசத்தில்தொக்கி இருக்கும் உண்மையான பொருள் அதுதான் என்று நாம் முடிவுக்கு வந்தாலோ, அது எந்த வகையிலும் தவருன முடிவாக இருக்க முடியாது.

இதுசமயத்தில்,அதிகாரத்தவர்க்கு ஒரு வார்த்தை கூற விரும்புகிறேம். அதாவது, நமது கழகத்தின் நோக்கம், நடவடிக்கை எதுவும், சட்ட வரம்பை மீறியதல்ல. மறைமுகச் செயல்கள்எவையும்நமக்குப் பிடிக்காதவைகள், பழக்கமில்லாதவைகள், நமக்கு வெறுப்பைத் தரக்கூடியவைகள். போலீஸ் படைக்கு அதிகத் தொந்தரவைக் கொடுப்பதாக, நமது கழகத்தின் நடவடிக்கை எதுவும் இருக்காது. தடிகொண்டு தாக்கவும், துப்பாக்கி கொண்டு சுடவும், போலீஸ் படைக்கு வசதியாக இருக்கும் முறையில்தான், நமது இயக்க நிகழ்ச்சிகள் வெளிப்படையாக, ஆனல் அமைதியாக, நிகழுமேயன்றி, சதியாகவோ சூழ்ச்சியாகவோ எதுவும் நடைபெருது என்பதை அறிவித்துக் கொள்ளுகிறேம்.

அதிகாரத்தில் இருப்பவர்கள் நிலைமைக்கேற்ப பேசுவதற்குரியஆற்றலையும், அறிவையும், அறபலத்தையும் தருவதுதான் கண்ணன் காட்டிய வழியானகீதை. அதன் சாராம்சத்தைத்தான், அனைவரும் விளங்கிக் கொள்ளும் முறையில்,மிகமிகத் தெளிவாகவும் சுருக்கமாகவும்எடுத்துக்காட்டி இருக்கிருர் அன்றைய தினம் ஆச்சாரியார்.

---

## கண்டனப்
# பொதுக் கூட்டம்
### மதுரை

சென்னை—குன்றத்தூர், தடியடி துப்பாக்கிப் பியோகத்தைக் கண்டித்து 29-10-50 ஞாயிறு மாலை 6-30 மணிக்கு மதுரை மேங்காட்டுப் பொட்டலில் சுமார் பத்தாயிரம் மக்கள் கொண்ட ஓர் மாபெரும் பொதுக்கூட்டம் நடைபெற்றது. தோழர் கலைத்தூதன் தலைமை வகித்தார். நகரக் கிளைச் செயலாளர் M. அய்யாசாமி, மாவட்ட அமைப்பாளர் S. முத்து, தோழர் சிவஞானம் ஆகியோர் சர்க்காரின் மிருகத்தனமான தடியடி தர்பாரைக் கண்டித்துப் பேசினர்கள். தடியடி துப்பாக்கிப் பிரயோகத்தைக் கண்டித்தும், காயமடைந்த — தாக்கப்பட்ட தோழர்களுக்கும் தாய்மார்களுக்கும் ஆறுதல் தெரிவித்தும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. "அடக்குமுறை ஆட்சி ஒழிக-திராவிட நாடு திராவிடருக்கே" என்ற பேரொலி விண்ணைப் பிளக்கக் கூட்டம் முடிவுற்றது.

---



6-ம் பக்கத் தொடர்ச்சி)

கும் அடிப்படை வேற்றுமையை நாம் ஆராய்ந்து அறியவேண்டும். எந்த நாட்டு ஆட்சி சொல்லளவுக்கு மக்களாட்சியாக இருக்கிறது என்பதையும் தீர்மானித்துக் கொள்ளவேண்டும்.

பெயரளவிற்காவது மக்களாட்சி என்பது பொருந்துமாறு இருக்கவேண்டுமானல், இங்கிலாந்தில் உள்ளது போல் முதியோருக்கு கல்வி போதிக்கும் முறை இங்கும் ஏற்பாடு செய்யப்பட்டாகவேண்டும். பகுத்தறிவு பீடமாக நமது முதியோர் கல்விக் கூடம் மாற்றப் பட்டாக வேண்டும். அதற்கானவகையில், சென்னை சர்க்காரின் கல்வி இலாக்கா தலைவர் முயற்சிக்கவேண்டும். சென்னை சர்க்கார் அவ்யோசனையை ஏற்குமா என்று பார்க்க வேண்டும்.

**கைவிடுவார்களா?**

ஏதாவது ஒரு காரியத்தை மேற்கொள்ளுகிறபொழுது, அதைப்பற்றி ஒன்றும் தெரியாத நிலையில், அதில் தவறு நேருவது நடைபெறக்கூடியதேயாகும். தவறு நேர்ந்துவிட்டதைக் கண்ட பிறகு, நல்லறிவாளர்களாக இருந்தால், பிறர் தூண்டுதலுக்காகக் காத்துக் கொண்டு இராமல் தவறைத் திருத்திக்கொள்வார்கள். அத்துடன் தவறையும் வெளிப்படையாகக் கூறி வருந்துவார்கள்.

தனி மனிதர்கள் செய்கின்ற தவறு, செய்கின்றவர்களைப் பாதிக்கும்; அவர்களுடைய நெருங்கிய உறவினர்கள் தாங்குறுவார்கள் அதனல். அதனல் நாட்டுக்கோ, பெரும் சமூகத்துக்கோ அவ்வளவாகக் கேடு ஒன்றும் ஏற்பட்டுவிடாது. ஆனல் பொறுப்பான பதவியில் இருப்பவர்கள், அதிலும் ஒரு மாகாண ஆட்சியை நடத்திச் செல்லுபவர்கள் செய்யும்தவறு மாகாண மக்களையும் பாதித்து, மாகாண எதிர்கால முன்னேற்றத்தையும் தடுக்கக்கூடியதாகும்.

கதர்திட்டம், ஒரு சிறந்த பொருளாதாரத் திட்டமல்ல என்று நாம் மட்டுமல்ல, எத்தனையோ அறிஞர்கள், எத்தனையோ சந்தர்ப்பங்களில் எடுத்துக் காட்டிவந்திருக்கிருர்கள். அதுகண்டு காங்கிரஸ்காரர்கள் பெரியவர்முதல் சிறியவர்வரையில் சீறறம் கொண்டார்கள், அவ்வாறு கூறினவர்கள்மீது எல்லாம். சுதந்திரப் போர்க்காலத்தில், ஏழை மக்கள் கவனத்தை ஈர்க்க கதர்திட்டம் ஒரு அரிய சாதனமாக இருந்தது காங்கிரசுக்கு, வறுமை மிகுந்த நாட்டிலும், தொழில் வளம் குறைந்துகிடக்கும் நாட்டிலும், ஆட்சிப் பொறுப்பு பிறரிடம் இருந்த நிலையிலும், கதர்திட்டம், ஏழையின் பசியைத் தணிக்கும், வேலை தரும், விடுதலை இயக்கத்தை வளர்க்கும் சிறந்த வாய்ப்பாக இருக்கலாம். ஆனல் அரசியல் அதிகாரம் கைக்கு மாறிய பிறகும், அனைவருக்கும வாழ்க்கைத் தரத்தை கணிசமான அளவிற்குஉயர்த்த சந்தர்ப்பம் கிடைத்தபின்னரும், அர்த்தமற்ற ஒன்றை, கதர்திட்டத்தைக், கட்டிக் காப்பது என்பது சிறிதும் பொருத்தமற்றதாகும்.

கதர்திட்டத்துக்காக ஒரு பெரிய அரசியல் ஸ்தாபனத்தின் பலமான பிரசாரம்; தேசிய ஏடுகளின் ஆதரவான எழுத்துக்கள்; கடவுள் தூதரின் ஆசீர்வாதம்; பணம் படைத்த ஆலை அரசுகளின் பணஉதவி; பொதுமக்கள் வரிப்பணத்திலிருந்து கொடுக்கப்படும் மானியம், இவ்வளவையும் பெற்றுக்கொண்டும் கூட கதர்திட்டம், அதில் ஈடுபட்டுள்ள ஏழைமக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தத் தவறிவிட்டிருக்கிறது. கதர் வாங்குவதில் மக்களுக்கு என்றும் ஆர்வம் இல்லாதிருந்தது போலவேதான் இன்றும் இருக்கிறது. கதர்திட்டம் வளரவில்லை—வளராது. வளரும் பொருளாதார ஏற்பாடல்ல அது.

இதுபற்றி, நிதிமந்திரி கனம் கோபாலர் புதுக்கோட்டையில் இத்திங்கள் முதல் வாரத்தில் கூறிஇருக்கிருர். அது இது.

**"சர்க்கார், தன்னுல் முடிந்தவரையில் கதர்திட்டத்துக்கு ஆதரவு தேடியும் கூட, கதர் திட்டம் திருப்தியளிக்கும் நிலையில் வளர்ச்சி பெறவில்லை."**

கோபாலரோ நமது நிதி அமைச்சராவார். நீண்டநாள் காங்கிரஸ் தேசபக்தர். நல் நூற்றிருப்பாரோ என்னவோ நமக்குத் தெரியாது, ஆனல் இன்றும் கதர் அணிந்து கொண்டு இருப்பவர். இன்றும் காங்கிரசின் செல்வப் பிள்ளையாக இருப்பவர். அவரே கூறுகிருர், கதர்திட்டம் வளர்ச்சியடையவில்லை என்று.

என்ன செய்ய வேண்டும் இப்பொழுது? அவர் அனுபவபூர்வமாகக் கண்டு பிடித்த உண்மையை நடைமுறைக்குக் கொண்டுவர வேண்டும். கதர் திட்டத்தைத் தொலைத்துத் தலைமுழுக வேண்டும். அதற்காகச் செலவிடப்படும் வரிப்பணத்தை உடனடியாக நிறுத்த வேண்டும். தோற்று விட்டதை வெளிப்படையாகப் பொது மக்களுக்கு விளக்கிக் கூறவேண்டும்.

ஆனல், இவ்வளவும் செய்வாரா கோபாலர் என்பது சந்தேகம்தான். கதர் திட்டத்தைக் குழிதோண்டிப், புதைப்

(17-ம் பக்கம் பார்க்க)

# திராவிடம் பெற மாணவர்களின் துடிப்பு

## விழிப்படைந்த மாணவர் உலகின் தீர்ப்பு

### தி. மா. மு. மாநாட்டின் தீர்மானங்கள்

1. இம்மாநாடு பேரறிஞர் பெர்ளுட்ஷா, தமிழ்க் கடல் மறைமலையடிகள், சேலம் கல்லூரித் தலைவர் திரு இராமசாமி ஆகியோர் மறைவு குறித்து ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறது.

தலைவர் க. இரா.
சத்தியேந்திரன்.

2. சர்வதேசிய அரங்கத்தில் வல்லரசுகளுள் ஏற்பட்டுள்ள ஆதிக்க வெறியின் காரணமாக, உலக அமைதிக்குப் பங்கம் விளைந்திருப்பதைக் கண்டு, இம்மாநாடு ஆழ்ந்த கவலை கொள்வதோடு, இம்மாதிரி பயங்கர நிலையிலிருந்து மீறி, உலக சமாதானத்தை நிலைநாட்ட, ஆவன செய்ய இம்மாநாடு உறுதி கொள்கிறது.

—தலைவர்

3. வரலாறு, இயற்கை அமைப்பு, கலாசாரம், மொழி ஆகிய எல்லா வழிகளிலும் தனித்தன்மையுடைய திராவிடநாடு, வடநாட்டு ஆதிக்கத்திலிருந்து விடுபட்டுத் தன்னாட்சி பெறவேண்டும் என்ற கோரிக்கையை, இம்மாநாடு முழு மனதுடன் ஆதரிப்பதுடன், இதற்காகத் திராவிட முன்னேற்றக் கழகம் செய்துவரும் கிளர்ச்சிகளுக்கும், திராவிட இயக்கத்தினர் செய்துவரும் கிளர்ச்சிகளுக்கும் இம்மாநாடு தன் முழு ஒத்துழைப்பை அளிக்குமென்பதைத் தெரிவித்துக் கொள்கிறது.

—C. T. தண்டபாணி
ச. ராமனுதன்

4. பிற்போக்கான நிலையிலுள்ள திராவிட மாணவர்களின் கலனை முன்னிட்டுப் பலகாலமாக இருந்து வந்த கம்யூனல் ஜி. ஓ. வை சட்ட விரோதமானது என்று சென்னை உயர்நீதி மன்ற தீர்ப்பைக் கண்டு இம்மாநாடு வருந்துவதோடு அதை சுப்ரீம் கோர்ட்டில் அப்பீல் செய்துள்ள சென்னை சர்க்காரைப் பாராட்டுவதோடு, சுப்ரீம் கோர்ட்டிலும் கம்யூனல் ஜி. ஓ. வுக்கு விரோதமான தீர்ப்பு கிடைத்தால் அரசியலமைப்பைத் திருத்தியாவது கம்யூனல் ஜி. ஓ. வை நிலை நிறுத்தும்படி சென்னை அரசியலாரை கேட்டுக் கொள்கிறது.

—S.A. கபீர், பாலகோபால்.

5. (அ) மக்களின் அடிப்படை உரிமைகளான பேச்சுரிமை, எழுத்துரிமை, எண்ண உரிமை இவைகளை, அர்த்தமற்றவைகளாக்கும் வகையில் கூட்டங்களுக்கு 144 போடுவதும், புத்தகங்களைப் பறிமுதல் செய்வதும், வழக்குத் தொடுப்பது, பத்திரிகைகளுக்கு ஜாமீன் கேட்பது, நாடகங்களுக்குத் தடைவிதிப்பது போன்ற அடக்குமுறைச் செயல்களைச் செய்வதையும், ஜனநாயக உரிமைப்படி கருப்புக் கொடி காட்டச் சென்றவர்கள் மீது கடுமையான தடியடியும், பேச்சுரிமைக்காகச் சென்றவர்கள்மீது துப்பாக்கிப் பிரயோகம் செய்வதையும் இம்மாநாடு வன்மையாகக் கண்டிக்கிறது.

(ஆ) பேச்சுரிமை எழுத்துரிமைக்காகப் போராடி குண்டடியும் தடியடியும் பட்டவர்களையும், சிறை சென்றவர்களையும் இம்மாநாடு பாராட்டுகிறது.

குடந்தை வீ.ரா. ராஜகோபாலன்
—சக்கிரியா

6. ஆண்டுதோறும் ஆயிரக் கணக்கான மாணவர்கள் கல்லூரிகளில் இடமின்மை காரணமாக உயர்நிலை கல்விபெற இயலாமற் போவதைக் கண்டு இம்மாநாடு கவலை கொள்வதுடன் இந்நிலைமாற மேலும் மேலும் பல கல்லூரிகளையும் பள்ளிக்கூடங்களையும் ஆரம்பிக்க வேண்டுமென்று சென்னை அரசாங்கத்தை இம்மாநாடு கேட்டுக் கொள்ளுகிறது.

—சண்முகம்-பெருமாள்

7. (அ) பல காரணங்களால் உயர்நிலைப் பள்ளிகளில் சேர்ந்து படிக்க முடியாமற்போன இளைஞர்களுக்கு வசதி செய்யும் வகையில் கல்லூரிகளில் சேராமலே தனிப்பட்ட முறையில் படித்துப் பல்கலைக் கழகத் தேர்வுகளில் எழுத அனுமதிக்குமாறு இம்மாநாடு சென்னைப் பல்கலைக்கழகத்தைக் கேட்டுகொள்கிறது.

(ஆ) தமிழ்ப்புலவர் வித்வான் பட்டம் பெற்றவர்களை B. O. L. போன்ற பட்டத்தேர்வுகளுக்குத் தனிப்பட்ட முறையில் அனுமதிக்கும்போது, அவர்கள் முன்னரே தகுதிபெற்றுள்ள தமிழ்ப் பகுதியைபும் எழுதும்படி வற்புறுத்தாது அதற்கு விலக்களிக்குமாறு பல்கலைக் கழகத்தாரை இம்மாநாடு கேட்டுக் கொள்கிறது.

—நன்னன்—ராஜேந்திரன்

8. தற்போதுள்ள வாழ்க்கைத் தரம் உயர்ந்துள்ள நிலையில் கல்லூரி, பள்ளி ஆசிரியர்களின் சம்பள விகிதத்தை அதிகமாக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்வதோடு மாணவர்களுடைய பள்ளி, கல்லூரி சம்பள விகிதத்தைக் குறைக்க வேண்டுமென்றும் இம்மாநாடு சென்னை அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்கிறது.

—ராமச்சந்திரன்
பாலசுப்பரமணியம்

9. ஆதாரக்கல்வி, குடிசைக் கைத்தொழில் என்ற பல பெயர்களில் செய்யப்பட்டுவரும் கல்வித் திட்டங்களை மிகவும் பிற்போக்கானது என்று இம்மாநாடு கருதுவதோடு, பகுத்தறிவு, விஞ்ஞானம் இவைகளின் அடிப்படையின்மீது கல்லதொரு கல்வித் திட்டத்தைக் கொண்டுவர ஆவன செய்ய அரசாங்கத்தினரை இம்மாநாடு கேட்டுக் கொள்கிறது.

—ப. கண்ணன்
மா. ப. குணன்



10. ஆடை முதற்கொண்டு பல் வேறுவகையான பொருள்கள், வடநாடு முதலிய பிற நாடுகளில் உற்பத்தியாகி, திராவிடநாட்டிலே கொண்டுவந்து குவிக்கப்படுவதால், இங்கு தொழில்வளம் குன்றி, செல்வம் தேய்ந்து வருவது கண்டு, இம்மாநாடு கவலைப்படுவதுடன், இந்தச் சுரண்டலைப் போக்குவதற்காக, இனிக் கூடுமானவரையில் வடநாடு முதலிய பிறநாட்டுப் பொருள்களை விலக்கி திராவிடத்திலே தயாரிக்கப்படும் பொருள்களையே உபயோகிக்கவேண்டுமென்று திராவிட மாணவர்களையும் நமது மக்களையும் கேட்டுக் கொள்வதுடன் இதற்கு முதல் துவக்கமாக, ஆடை வகையில், திராவிட கைத்தறித் துணிகளையே கூடுமானவரையில் உபயோகிப்பது என்று தீர்மானிக்கிறது.

—சிவசாமி
சுப்பிரமணியம்

11. வடநாட்டுப் பொருளாதார ஏகாதிபத்தியத்திடம் திராவிடநாடு சிக்கிச் சீரழிவதை உலகுக்கு உணர்த்தவும் மேற்படி ஏகாதிபத்யத்திடமிருந்து திராவிடநாடு விடுதலை பெற வேண்டும் என்ற கொள்கையை வலியுறுத்தவும், இப்போது கடை பெற்றுவரும் வடநாட்டுத் துணிக் கடை உணவுக் கடை மறியல் உதவி புரிவதால், அந்த முயற்சியை இம்மாநாடு பாராட்டுவதுடன், அந்த அறப்போரில் ஈடுபட்டுச்சிறை ஏற்ற தோழர்களைப் பாராட்டுகிறது.

—நாராயணன்
சோ. பெருமாள்

12. சென்னை மாநில திராவிட மாணவர் முன்னேற்றக் கழகத்திற்கு இவ்வாண்டிற்குக் கீழ்க்கண்ட அலுவலாளர்களை இம்மாநாடு தேர்ந்தெடுக்கிறது.

பொதுச்செயலாளர் :—K. A. மதியழகன்

உதவிச்செயலாளர்கள் :—
S. சிவசாமி—பச்சையப்பன் கல்லூரி
V. ராஜகோபாலன்—குடந்தை அரசியலார் கல்லூரி
K. தண்டபாணி—கோவைக் கல்லூரி

பொருளாளர் :—T. பாண்டியன்

நிர்வாகக் குழு உறுப்பினர்கள் :—
S. ராமச்சந்திரன்
S. கபீர்
முத்துவேலு
கண்ணன் } சென்னை
T. ராமசந்திரன்—வாணியம்பாடி
M. சென்னியப்பன்—கோவை
ராஜதுரை—விருதுநகர்
சிவப்பிரகாசம்—சேலம்
D. வெங்கடாசலம் - அண்ணமலை நகர்
T. விஸ்வநாதன்
T. K. பொன்னுவேலு

(18-ம் பக்கத் தொடர்ச்சி)

கொண்டு நடைபெற வேண்டுவது மட்டும் முக்கிய மாகும்.

இந்தியாவில் ஆட்சி மாறியிருக்கிறதே தவிர, போலீஸின் மனப்பான்மை இன்னும் மாறவில்லை என்பதற்கு, இது போன்ற எத்தனையோ சம்பவங்களை நாம் எடுத்துக்காட்ட முடியும். போலீஸ் மனப்பான்மை மாறாததற்கு, காங்கிரஸ் ஆட்சியாளர்களேதாம் பொறுப்பாகும். மக்களிடத்தில் பொறுப்பும், தன்னடக்கமும் கொண்டு நடந்துகொள்ளவேண்டியது போலீஸின் முக்கிய கடமையாகும். இதை மற்ற நாடுகளில் நாம் பார்க்க முடிகிறது. ஆனால் நம் நாட்டில், ஆட்சி நம்மவர் கைக்கு வந்தும், போலீஸுக்கு இந்த மனப்பான்மை ஏற்படாம விருப்பதற்குக் காரணம், போலீஸ் நிர்வாகத்தில் தலைகீழான மாறுதல் இல்லாததுதான் என்பது தெரியவரும். இனியேனும் இத்துறையில் கவனம் செலுத்துவார்களென்று நம்புகிறோம்.

சென்னையில் நடந்த தடியடி, துப்பாக்கிப் பிரயோகம் பற்றி அரசாங்கம் ஒரு விசாரணைக் குழு ஏற்படுத்த வேண்டுமென நாம் கேட்டுக் கொள்ளுகிறோம்.

பிரசண்ட விகடன் (1-11-50)

(15-ம் பக்கத் தொடர்ச்சி)

பதிலே நிதி அமைச்சருக்கு ஆசை இருக்கலாம். அதற்கான நடவடிக்கைகளை மேற்கொள்ள அவர் விரும்பினும் விரும்பலாம். ஆனால் காமராஜர் இருக்கிறரே, தமிழ் நாட்டு 'ராஷ்டிரபதி' அவர் லேசிலே விட்டுவிடமாட்டார், கோபாலர் கண்ட உண்மைப்படி நடந்து கொள்ள, கதரின் பொருளாதாரமும் கதரின் வீழ்ச்சியும் அவருக்கு ஒன்றுமே புரியாதே. பிரஃபுரிய வைக்க முயன்றால் கூடத்தான், அவர் செவி கொடாரே அதற்கு. எனவே, கதர் திட்டமும் அமுலில். இருக்கும், இந்தக் கும்பல் அதிகாரத்திலே இருக்கிற வரையில், பொது மக்கள் வரிப் பணமும், அதன் பெயரால், பாழாகிக் கொண்டுதான் இருக்கும். என்ன செய்வது! பொது மக்கள் விழித்துக் கொள்ளுகிற வரையில் கதர் திட்டமும் நாட்டில் நடமாடிக் கொண்டுதான் இருக்கும்.

### திராவிட முன்னேற்றக் கழகம்
### காவேரிப் பாக்கம் (வ. ஆ.)

காவேரிப் பாக்கம் திராவிட முன்னேற்றக் கழகச் செயற்குழுக்கூட்டம், 30-10-50 மாலை 6 மணிக்கு மு. கண்ணப்பன் இரும்பு கடையில் தோழர் க. சம்பந்தன் தலைமையில் கூடி கீழ்கண்ட தீர்மானம் ஏகமனதாக நிறைவேறியது.

தீர்மானம் :—

24-10-50-ல் சென்னைக்கு இராசகோபாலாச்சாரியார் வருகைக்குக் கருப்புக்கொடிகாட்ட இருந்த மக்களை போலீசார் தடியடிப் பிரயோகம் செய்து காட்டுமிராண்டித் தனமாக நடந்து கொண்டு பொது மக்களுக்கு தொல்லை கொடுத்ததையும், குன்றத்தூரில் 144-ஐ மீறியதற்கு போலீசார் மனிதத் தன்மையற்ற முறையில் நடந்து கொண்டு துப்பாக்கிப் பிரயோகம் செய்ததையும் இக்கூட்டம் வன்மையாகக் கண்டிக்கிறது.

மு. கண்ணப்பன்
செயலாளர்.

# தடியடி துப்பாக்கிப் பிரயோக அக்கிரமம்

## அடிப்படை உரிமைகளை அபகரிப்பது கூடாது

### விசாரணை குழுவை நியமிக்கவேண்டும்

### 'பிரசண்டவிகடன்' கண்டனம்

சென்னைக்கு அண்மையில், விஜயம் செய்திருந்த மத்திய அமைச்சர் ஸ்ரீ இராசகோபாலாச்சாரியாருக்குக் கருப்புக் கொடி காட்ட வந்திருந்தவர்களையும், பொது மக்களையும், தடியடிப் பிரயோகம் செய்து போலீஸார் கலைத்திருக்கிறார்கள் என்று தெரிகிறது. மத்திய அரசாங்க அமைச்சர்களுக்குக் கருப்புக் கொடி பிடிப்பதென்று திராவிட முன்னேற்றக் கழக மாநாட்டில் முடிவு செய்திருக்கிறார்கள். இதன்படி ஏற்கனவே மத்திய விளம்பர அமைச்சர் ஸ்ரீ திவாகர் சென்னைக்கு வந்திருந்த போது கருப்புக் கொடி காட்டப்பட்டிருக்கிறது. இவ்விதம் ஸ்ரீ திவாகருக்கு அமைதிவழியில் நின்று கருப்புக் கொடி காட்டியவர்களே, ஸ்ரீ இராசகோபாலாச்சாரியாருக்கும் கருப்புக்கொடி பிடிக்க முற்பட்டிருக்கிறார்கள். கருப்புக் கொடி பிடிக்க வந்தவர்களைக் கலைந்து போகும்படி போலீஸார் கேட்டுக் கொண்டதாகவும், அவர்கள் கலைய மறுத்ததால் தடியடிப் பிரயோகம் நடந்ததென்றும் சொல்லப்படுகிறது. இத் தடியடிப் பிரயோகத்தின் பயனாக, பலர் படுகாய மடைந்திருக்கிறார்கள் என்றும் தெரிகிறது.

கருப்புக்கொடி காட்ட வந்தவர்கள் அமைதிக்கும் ஒழுங்கிற்கும் கட்டுப்பட்டு தங்கள் அதிருப்தியைக் காட்டுகிறார்களா என்பதையேதான் போலீஸ் முக்கியமாகக் கவனித்திருக்க வேண்டும். அதற்கு மாறாக, ஒருவிதக் காரணமும் இல்லாமல் அவர்களைக் கலைந்துபோகச் சொன்னதின் கூற்றை நாம் புரிந்துகொள்ள முடியவில்லை. ஒரு ஜனநாயக நாட்டில், அரசாங்கத்திடம் மக்கள் தங்களுக்குள்ள அதிருப்தியைக் காட்டுவதற்கு அமைதியான முறையில் கிளர்ச்சி செய்வதை, ஆர்ப்பாட்டம் நடத்துவதை யாரும் குற்றம் என்று சொல்லமாட்டார்கள். இந்த உரிமைகள் கூட இல்லாவிட்டால், அதை ஜனநாயக ஆட்சி என்று சொல்வதற்கும் முடியாது. உலகம் ஒப்புக்கொண்ட அடிப்படை உரிமைகளில் மேற்கண்ட கிளர்ச்சிகளுக்கு இடம் தரப்பட்டிருக்கிறது. நம்முடைய இந்திய அரசியல் சட்டமும் அவ்வுரிமைகளை மக்களுக்கு வழங்கியிருக்கிறது. இப்படியெல்லாம் இருந்தும்கூட, சென்னை ஆட்சியாளர், தடியடிப் பிரயோகம் நடத்தி மக்கள் உரிமைகளைப் பறித்திருப்பதற்காக நாம் உண்மையில் வருந்துகிறோம்.

தடியடிப் பிரயோகம் நடத்திய 3 நாளைக்குப் பிறகு, சென்னையை அடுத்துள்ள குன்றத்தூரில், துப்பாக்கிப் பிரயோகம் நடந்து, பலர் படுகாய மடைந்திருப்பதாகச் செய்தி வந்திருக்கிறது. இத் துப்பாக்கிப் பிரயோகம், கூட்டங்களுக்குப் போட்டிருந்த 144 தடை உத்தரவை எதிர்த்து தி. மு. கழகத்தார்கள் கூட்டம் கூடமுயற்சித்ததின் விளைவாக ஏற்பட்டது என்று தெரிகிறது. கூட்டங்களுக்குத் தடை உத்தரவு போடுவது, பிரிட்டிஷ் ஆட்சியைவிட காங்கிரஸ் ஆட்சியில் அதிகமாகிக்கொண்டு இருக்கிறது. சுதந்திரம் வந்ததுமுதற்கொண்டு, ஏறக்குறைய, மக்கள், போலீஸ் ஆட்சியிலிருக்கும் நிலைமையிலேயே இருந்து வருகின்றனர். மிக நெருக்கடியான சமயங்களில் அன்றி மற்ற சமயங்களில் கூட்டங்களுக்குத் தடை போடுவது ஜனநாயகத்துக்கு எதிரான பாசிசக் கொள்கையாகும். துப்பாக்கி, தடியடிப் பிரயோகங்களுக்கு, வழக்கம்போல் போலீஸ், மக்களில் சிலர் கல்லெறிந்தார்கள் என்ற கதையையே திரும்பப் படித்திருக்கிறது. ஏற்கனவே இதுமாதிரி காரியங்களில் நடந்த விசாரணைகளின்போது, போலீஸின் கூற்று மறுக்கப்பட்டு வந்திருக்கிறது. இப்போது நடந்த தடியடி, துப்பாக்கிப் பிரயோகம் பற்றி விசாரணை நடத்தினால், போலீஸின் கூற்று எந்த அளவுக்கு உண்மை என்பது வெளியாகிவிடும். ஆனால் இவ்விசாரணை உயர் நீதிபதிகளைக்

(17-ம் பக்கம் பார்க்க)



(2ம் பக்கத் தொடர்ச்சி)

சென்னையிலும், குன்றத்தூரிலும். போலீஸ் எடுத்துக்கொண்ட பயங்கர அடக்குமுறை நடவடிக்கைகளைக் கண்டித்தும், கண்டனத்தை முதல் அமைச்சருக்குத் தந்திமூலம் தெரிவித்தும் இருப்பதாக விளம்பர உறுப்பினர் அறிவிக்கிறார்.

**அங்கலக்குறிச்சி**

இவ்வூரில் 24—10—50-ந் தேதி மாலை நடைபெற்ற தி. மு. க. பொதுக் கூட்டத்தில், 'தற்கால அரசியல் நிலை' என்பது குறித்து தோழர் C. N. இராஜு விளக்கமாக எடுத்துக் கூறினார்கள். சென்னை, குன்றத்தூர் போலீஸ் அடக்குமுறைகளைக் கண்டித்துத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டதாகவும், கூட்டம் நடைபெற்ற மைதானத்துக்கு 'அண்ணா மைதானம்' என்று சொற்பொழிவாளரால் பெயரிடப்பட்டதாகவும், தோழர் இப்ராகிம் அறிவிக்கிறார்.

**குடியேற்றம்,**
**வட ஆற்காடு மாவட்டம்.**

5—11—50ல், இவ்வூர் சித்தூர் ரோட்டில் உள்ள தி. மு. க. படிப்பகத்தில், இரவு 10-30 மணிக்குக் கழக பொது உறுப்பினர்கள் கூட்டம்கூடி, குன்றத்தூர் சென்னை சம்பவங்களைக் கண்டித்தும், கண்டனத்தைத் தந்திமூலம் முதல் அமைச்சருக்குத் தெரிவித்தும், பாரபட்சமற்ற விசாரணை செய்ய சர்க்கார் முன்வரவேண்டும் என்று கேட்டுக்கொண்டும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டதாக விளம்பர உறுப்பினர் அறிவிக்கிறார்.

**அம்மாப்பேட்டை,**
**சேலம் மாவட்டம்.**

3—11—50-ந் தேதி இரவு 7 மணிக்கு தி. மு. கிளைக் கழகத்தின் அவசர நிர்வாகக் குழுவின் கூட்டம் கூட்டப்பட்டு, குன்றத்தூரிலும், சென்னையிலும் போலீஸ் அளவு கடந்து நடந்துகொண்டதைக் கண்டித்தும், கண்டனத்தைத் தந்தி மூலம் தெரிவித்தும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டதாக அறிவிக்கிறார் விளம்பர உறுப்பினர்.

**வாரீர்! வாரீர்! கருப்புக்கொடிகாட்ட!!!**

**வட நாட்டு மந்திரி வருகிறார் மதுரைக்கு!**

**கடமையைச் செய்யுங்கள்!**

**கருப்புக்கொடி காட்டுங்கள்!**

**18-11-50 ஞாபகமிருக்கட்டும்.**

**மத்திய சர்க்கார் கைத்தொழில், சப்ளை இலாகா மந்திரி**

**கனம் அரிகிருஷ்ண மஹதாப்**

**18-11-50 சனிக்கிழமை மாலை மதுரை வருகிறார்.**

**மதுரை பொதுமக்களே!**

**மாணவர்களே!**

**தொழிலாளத் தோழர்களே!**

**மறந்து விடாதீர்கள் கருப்புக்கொடி காட்ட!**

**சீவில்லி புத்தூர்**

இவ்வூர்மறுமலர்ச்சி நாடக மன்றப்பொதுக் கூட்டம் 11-10-50. புதன்கிழமை பிற்பகல் மூன்று மணிக்கு ஆ. பெ. ஆறுமுகம் அவர்கள் தலைமையில் ஊருணிப்பட்டித் தெருவில் நடைபெற்றது.

செயற்குழு உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டு கூட்டம் நன்றிகூறலுடன் முடிவுற்றது.

**கடலூர்**

கடலூர் (மதுரை)நகர திராவிட முன்னேற்றக் கழகத்தின் சார்பாக அனுதாபக் கூட்டம், அழகிரி நிலையில் 29—10—50-ம் நாள் மாலை 8 மணிக்கு தி. மு. க. அமைப்பாளர், வி. பரமன் தலைமையில் ஓர் கண்டனப் பொதுக்கூட்டம் நடைபெற்றது.

அவ்வமயம், தி. மு. க. செயலாளர், எம். அழகு மற்றும் கழகத் தோழர் பலர், அரசாங்கத்தின் போக்கை வன்மையாகக் கண்டித்தும், குன்றத்தூரில் நடைபெற்ற துப்பாக்கிப் பிரயோகத்தை, வன்மையாகக் கண்டித்தும், ஏகமனதாகத்தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. சென்னை சர்க்காரின் அடக்குமுறைகளைக் கண்டிக்கும் முறையில் சிறை செல்லவும் தயாராக இருப்பதாகப் பல தோழர்கள் சம்மதம் தெரிவித்துள்ளதாகச் செயலாளர் அறிவிக்கிறார்.

**நன்கொடை**

நம் 'போர்வாள்' இதழின் போடி நாயக்கனூர் விற்பனையாளர் தோழர். எஸ். எஸ். ஷண்முகம் அவர்கள் திருமணத்தில் போர்வாளுக்கு அளித்த நன்கொடை ரூ 1 வரப்பெற்றோம். நன்றி

★

## நடக்க இருப்பது

### வாணியம்பாடி

வாணியம்பாடி. வ. ஆ. நவம்பர் 19-ஞாயிறு மாலை 6 மணி யளவில் தி. மு. கழகச் சார்பாக வாரச் சந்தை அருகில் மைதானத்தில் M. P. வடிவேல் தலைமையில் ஓர் பொதுக்கூட்டம் நடைபெறும். அது போது தோழர்கள் இரா. நெடுஞ்செழியன். M. A., சி. பி. சிற்றரசு இவர்கள் சொற்பொழிவாற்றுவார்கள். அனைவரும் திரண்டு வருக.

## E. V. K. சம்பத்

### வட ஆற்காடு மாவட்ட சுற்றுப்பிரயாணம்

14—11—50 திருப்பத்தூர்.
15—11—50 செங்கம்.
16—11—50 வந்தவாசி,
17—11—50 ஆரணி.
18—11—50 அகரம் சேரி.
19—11—50 போளூர்.

Edited, Printed and ublished bY P. C. Manickavachagam alias Kanchi Manimoliyars Free Printers 147, C al Merchant St., Madras. Joint Editor, M. Ilancheliyan B. A.(Hon)

